வேறு.

வாண்மதிச்செஞ்சடைமுடியோன்வாய்மையுணர்ந்தவன்கமலத்
தாண்மதிக்குஞ்சுதரிசன்முன்றரைமிசைவீழ்ந்தடிகேள்யா
னுண்மதிக்குநிகர்வெளுத்தநரையுடம்பானலிவுற்றேன்
சண்மதிக்கும்புனலாடல்செயமாட்டேன்சிவபெருமான். (௩௪)

தன்னீர்கண்முழுதாடுநசையுடையேனதுபயக்கு
மந்நீர்மையருளொன்றுனண்ணலுமங்கதுகேட்டுக்
கொன்னீர்வெற்காருத்தன்குரம்பகளுல்வரம்பறுசீர்
மின்னீர்மைமுகிறவழும்வியன்கந்தமாதனத்தில். (௩௫)

புனன்முழுதும்வரவழைக்கேம்புசரணையெனப்புகன்று
மணமதனிலிணைந்தருளவந்தனவப்புனலெல்லா
மணையுறழ்தண்ணளியீசனந்தனைப்பார்த்தருளா
முனிவரனேயித்தீர்த்தமுடிக்குமுனைவிளையனைத்தும். (௩௬)

நீர்கள்பலசெறிந்திடலானிகழ்சருவதீர்த்தமெனும்
பேர்பெறுமானதாமம்பெறுமனத்தால்விளித்தமையாற்
பார்பரவுபுனலின்பம்பரபோகமவையிரண்டு
மேர்பெருகுமிஃதொன்றேயினிதனிக்குமிருபிறப்போய். (௩௭)

நடும்பதகவனக்கழலாங்காமமுதலாறுடைக்கு
நெடும்புயலாம்பிறப்பிறப்பென்னுமுதலைநீங்காத
நடும்பமெனுமளவைபடாக்குரைகடலின்கரையேற
விடும்புணையாம்வேதாந்தவித்தையன்றிமுத்திதரும். (௩௮)

நிரையவழியடைக்குமிதுநெடுமறையோய்குடைகென்றே
வரையரையன்மடப்பாவைமணவாளனருள்புரிந்தா
னுரைசெய்துனையதிலாடியுததியெழுங்கதிர்போல
நரைதிரைபோயிளம்பருவநல்லுருவங்கொண்டெழுந்தான். (௩௯)

ஆறுடையானுடனணைந்தாரிதின்மூழ்குமவன்கிழவன்
வேறொருவனெழுந்தனனேவிளங்கொளிநீர்ப்பெருமையினான்
மாறுறுமூப்பினைக்கழுவிவந்தனனேவிவனென்று
வாறுலவுசடைப்பெருமானருள்பரசியதிசயித்தார். (௪௦)

சுதரிசன்றனவண்படைத்தசுடர்ப்படிவந்தனைக்காணூஉப்
பதராறுநான்முனிவருடன்பங்கயநற்றடமதனைத்
துதிபுரிந்தானிறைவனவண்மேறையோன்றனைத்தெரிந்து
வதிகுதிநீயெஞ்ஞான்றும்வளங்கெழுநீரிதன்கரைமேல். (௪௧)

ஆடுகினைந்தெமையிதனிலயற்றீர்த்தஞ்செலல்வேண்டாம்
நீடுனைக்குமிறுதியினின்வேதியனைவிளைத்தினிதுன்
னோடுபடிந்திடுமவர்க்குமுதவிடுமென்றுரைத்தருளித்
தேடுமிருவருக்கரியசிவபெருமான்கரந்தகன்றான். (௪௨)

வேறு.

ஆனதற்பினர்வேதியனப்புனலாடியுற்றயிராகமகற்றிவிண்
போனவக்கணமேவினன்முத்தியிற்போதநற்றவிர்பாமுழுமக்கிவண்
மானதப்புனல்வாய்மைநவிற்றினமாசிலிக்கதையோதியவுத்தமர்
பாணநற்செவியாலடைவுற்றவர்பாதகக்கடறாளெழவற்றுமே. (௪௩)

சருவதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௭௫௨.

# தனுக்கோடிச்சருக்கம்.

பயங்கொள்பவப்படையுடைக்கும்பவுராணிகோத்தமனும்பண்புசான்ற
நயங்கொள்புகழ்ச்சூதமுனிநன்முனிவருடன்மீண்டுநவிற்றல்செய்வான்
வயங்கொள்புலப்பகைதடிந்தீர்மானதநீர்படிந்தோர்கள்வையங்காக்குஞ்
சயங்கொண்மனுக்கோடிநிகர்தசரதன்சேய்தனுக்கோடிதன்னிற்றோய்வார். (௧)

பீடுகெழுமதிலிலங்கையரக்கர்தனுக்கோடிபலபிளவுகண்ட
நீடுதனுக்கோடியினைநினைந்தாலும்புகழ்ந்தாலுநேர்கண்டாலும்
வீடுபெறலெளிதாகும்வெந்நரகமெழுநான்கும்விழியிற்காணார்
கோடுமதிமுடியவன்றாள்குறித்துணருஞ்செய்யமதிக்குணத்தினீர்காள். (௨)

குழுமுதமமந்ததமம்ரவுரவமாரவுரவமேகும்பிபாக
மழிவுதருகாலசூத்திரமசிபத்திரவனமேயருந்தலாகாப்
புழுவுணவுபுகலரியவிருட்கூபஞ்சந்தஞ்சம்பொருமுட்கூராற்
பிழைபடுசன்மலிசூர்மிபெருகியெழும்வைதரணிபிராணரோதம். (௩)

ஆயவிசசனம்லாலாபக்கணமேயவீசியுடனட்டருஞ்சார
மேயவுணவச்சிரகண்டகங்காரவளறரக்கர்வெள்ளவுண்டி
தூயதழல்சொரிசூலப்பிராந்தவிதோதனந்தந்தசூகந்துய்த்தல்
சேயபரியாவருத்தந்திரோதானஞ்சூசிமுகஞ்செந்நீர்நுங்கல். (௪)

நச்சழலிற்சுழல்கொள்பரிபீடனமென்றிவைநரகநாலேழாகு
மச்சமிவற்றுண்டெனவுமடைவதிலர்புகுந்திடருற்றழுந்துவாரோ
வெச்சவிடைக்கிரங்கலின்றியெழுங்கலசமுலைச்சனகியென்னுமின்சேர்
பச்சைமுகிலிடந்தயங்குந்தனுக்கோடிபடிந்தவர்கள்படிமையீர்காள். (௫)

மாதர்பொருண்மைந்தரிவர்தமைத்திருடும்வஞ்சகனைவலியகால
தூதர்பிணித்திருள்பெருகுதமத்திடுவரந்ததமந்துன்னிச்சோர்வா
னுதனுயிர்கொன்றுநிதிகொண்டுநுகர்நவையுடையானல்லுயிர்க்குத்
தீதிழைத்துமனைநிறைப்பான்விடவரவாரவுரவத்திற்சென்றுசேர்வான். (௬)

வன்றுயர்கூர்மாரவுரவத்தினிடையடைந்துமனைமாதினோடுந்
தன்றனயர்பசித்திருப்பத்தானுகர்வான்றன்றசையைத்தானேதின்பா
னன்றியுயிருளபறவைவிலங்கிவற்றையருள்சிறிதின்றடுவோனுகு
நன்றியிலாவேடர்தமிலிழிந்தோனைநமன்றூதர்நடுங்கப்பற்றி. (௭)

குன்றுநிகர்புயமுரியப்பிணித்திழுகக்கொடுயோந்துகும்பிபாக
மென்றநரகினிற்றயிலமெரிமயமாமதனிடையிட்டெரிப்பர்பன்னு
ளன்றிமறையந்தணரையன்னையத்தனிவரையவமானஞ்செய்வோன்
றுன்றுமிடமோரயுதயோசனையாங்கொடுங்காலசூத்திரத்தில். (௮)

மேலெறிக்கவிரவிசுடர்கீழெரியவெய்யதழல்விளங்குசுல்வத்*
தாலமைத்தநெடுங்களத்தினுவிகுலைந்தழுங்கியுளமலறிச்சோர்வா
னுமறைநெறிமாற்றிநவைநெறியினடக்குமவனரினீங்குங்
காலனெடுந்தூதவராலடைவனசிபத்திரவெங்கடறுதன்னில். (௯)

* சுல்வம்—தாமிரம்.

வென்றிபுனைமுடிமன்னனாயிடினுமவனுழையில்வினைஞரோனு
மொன்றுமபராதமுறாதவர்கடமைத்தண்டிப்போருயர்ந்தபூமி
அன்றுசூர்தமையுடலம்வருத்திடுவோரிவரைநமன்றூதர்பற்றிப்
பன்றிமுகமெனுநரகிலாலையிடுகன்னலெனப்படுத்துவாரே. (௧௦)

யாவதும்மெம்பரனருளென்றிருக்குநருக்கிடர்புரியுமிழிஞனந்த
கூவமதிற்கண்படைநீத்தன்னவராற்றுயர்க்கடலுட்குளிப்பன்பன்னாட்
டேவர்முதலைவகையமகம்புரியாதுண்ணுமவன்சிறந்தவுண்டி
மேவுசமபந்தியினோர்க்கிடலின்றித்தான்மிசையும்வெறியனின்னோர். (௧௧)

கிருமியுணவெனுநரகந்தனிற்புகுந்துதாமுநெடுங்கிருமியாகிச்
செருமிவளர்கிருமிகளுக்குணவாகித்தாமுமவைதின்றுநோவா
ரருமறையோராடகத்தைப்பிறர்நிதியைவன்மையினாலபகரிப்போன்
திருடுமவன்றிருடுவிக்குந்தீயனெனச்செப்பிடுமித்தீயோரெல்லாம். (௧௨)

காய்கனல்சேர்கருந்தாதுக்குழியதனுளெவ்விடமுங்கலந்துமொய்த்திட்
டகறிக்குஞ்சந்தஞ்சநரகடைவர்தென்றிசைக்கோனேவலோரா
லாய்கலைதேரருண்முனிவீரனாகவொணாவாடவனையணைந்திட்டாளும்
வேய்கெழுதோளிணைபுணர்தற்குரியளல்லாடனைப்புணரும்விதியிலானும். (௧௩)

அழலிருப்புமகன்மடந்தையத்துணையையிருசுடருள்ளளவும்பற்றித்
தழுவியிடருழந்தலைவர்சூன்மியின்பாற்சன்மலிமுட்டைத்துச்சோர்வான்
குழுவுமிளைப்பலவிதத்தான்வருத்திடுவான்வைதரணிகொண்டமிழ்த்து
மொழியுநெறிப்புக்கறத்தின்கனாயுடைக்குமரசேனுமுழையரோனும். (௧௪)

மானமிகந்தாசாரவரம்பொருவிவிடலியிதழ்மதுநீர்மாந்திக்
கானவிலங்கெனவிலங்கிமறைநெறியின்மருண்டுழலுங்கடியன்சேர்வ
னானுதிரமலங்கோழைமூத்திரஞ்சீபித்தமிவற்றொழிபின்றாகி
யானவதிபயங்கரங்கூர்பெருநரகிலடுங்கூற்றினாணைதன்னால். (௧௫)

காட்டுறையும்விலங்கினுயிர்கடுங்கணையான்ஞமலிகளாற்கவர்ந்துநாளும்
வேட்டைமுயல்வெய்யவனைமேதியிறைவிடுந்தூதர்விசிகத்தேற்றி
யீட்டுபிராணத்தகைவாமிருநரகில்வீழ்த்திடுவாரொச்சத்தாவி
வாட்டுமவன்மறைமுறைவிட்டகந்தையினாலரிபடுவன்வைசசத்தில். (௧௬)

தொல்குலஞ்சேர்மனைவியைத்தன்சுக்கிலநீர்நுங்குவிக்குந்துரிசனந்நீர்
மல்குநெடுங்குழிக்கிடந்துகாமவறல்பருகியிடும்வணிகர்தம்பா
லல்குபொருள்கவர்ந்துநகரழலூட்டிவிடமருத்தியாவிக்கீறு
நல்குமவன்வச்சிரதங்கிட்டிரப்பேர்நரகடைந்துநைவன்பன்னாள். (௧௭)

சொன்னவர்களனைவர்களுந்தனுக்கோடிபடிந்தனரேற்சொல்லிவந்த
வெந்நரகமடைவதிலர்வேறுபலநிரயங்கள்விளம்பாநின்ற
வின்னமுளவவையெவற்றுமிதின்மூழ்குமவர்மூழ்காரிவுளிமேதத்
துன்னுபலம்படைத்திடுவாரொருவிசையித்தனுக்கோடியுதகந்தோய்வார். (௧௮)

வேறு.

ஆவியுண்மையறிவுதலைப்படு, மேவுநாலுவிதங்கெழுமுத்தியும்
பாவவள்ளிபடராபழங்கணும், யாவுங்காய்படுமின்பமுண்டாகுமால். (௧௯)

ஆடகத்துலையாயிரங்கோதனங், கூடநல்குங்கொடைப்பயன்றந்திடு
நீடுகீர்த்தியுஞ்செல்வமுநீங்கலா, மாடுமல்குமனத்திருணீங்கிடும். (௨௦)

அஞ்சுதீமையிலொன்றிலயுதமாம், புஞ்சமைம்பதினாயிரம்போக்கிடும்
பஞ்சபாவந்தனக்கனுபாதக, மெஞ்சலில்லனயாவையுமெஞ்சுமால். (௨௧)

பரவுமாசைப்படுகடற்கப்புறம், விரவுமுள்ளம்விரிகடன்மேதினி
புரவுபூண்டபுயனுறழ்கார்முகக், குரவனீள்சிலைக்கோடியிலாடினால். (௨௨)

கொன்னெடுந்தனுக்கோடிநலம்புக, லன்னவாய்மையிலையமின்றையர்காள்
வன்னிவெந்தமழுவினைநாவினு, லின்னமெய்ம்மையென்றேந்துவன்யானரோ. (௨௩)

யாங்கிளந்தவிருந்தனுக்கோடியி, னேங்குசிருபசாரமென்றோதுவான்
சாங்கரீயமரபிற்சனித்தவ, னங்கதன்றியறக்கயலாகுவான். (௨௪)

மைத்தமாமருண்மாற்றிவளங்கெழு, புத்திநல்கிப்புரிந்திடுமாக்கமு
மெய்த்தஞானமும்வீடுமளித்திடு, மித்தகைத்தனுக்கோடியிருக்கவே. (௨௫)

வேற்றுநீர்சிலவேண்டிப்படருத, லாற்றுநீர்மையராரினும்பேதைய
ரேற்றநன்றியொன்றில்லாரிவர்மருட், பேற்றின்மான்மியம்பேசவொண்ணுதரோ.

பெருகுநீரிதன்பீடுபழிச்சுவா, ருருகிநோக்குநருள்ளத்தழுத்துவா
ரருகுசென்றுதொடுமவரன்பினுற், பருகுவார்முலைப்பால்பருகாரரோ. (௨௭)

நீரின்மேன்மைநிகழ்த்துழிநீடருள், வாரிகூதன்மறைமொழிமாதவர்
பேரிதற்குப்பெருந்தனுக்கோடியாங், காரணம்புகலென்னக்கழறுவான். (௨௮)

கோனிராமன்குலவுதன்றேற்றமா, மானனன்றனதாவிமுருக்கிமுன்
பானுமைந்தன்பறித்தமவுலியை, மேன்மைவீடணன்சென்னிமிலைச்சியே. (௨௯)

துறைகொணீர்மிசைதோன்றியபோதுபோற், சிறையினீங்கியசீதையுந்தம்பியு
மறையுணர்ந்திடுமாருதிவானரர்க், கிறைவனுதியர்யாரும்வளைப்பவே. (௩௦)

சித்தர்சாரணர்சேணியிற்கந்தரு, வத்தர்தேவரரம்பையர்மாதவர்
மொய்த்துவாழ்த்திடமூவெயில்வாட்டிய, வத்தனென்னவில்லங்கையிலேந்தியே.

இலங்கைநீங்கினனிட்டவின்னீங்கிடா, நலங்கொள்கார்தவழ்ஞாயிறுந்திங்களும்
வலங்கொள்வெற்பெனவண்கந்தமாதனவிலங்கன்மேல்விளையாட்டொடுமேவினன்

ஆண்டிருந்துழியண்ணலிராகவன், றீண்டமெய்யுடையாளாச்சிலையினை
மாண்டதன்குணத்தோடும்வகுத்ததாள், பூண்டுவீடணனென்றுபுகலுவான். (௩௩)

சிறிலாதிக்குரம்பிருந்தாலிஃ, தாறதாகவடுவாரடலுளோர்
வீறுசேதுவிடர்ப்படவில்லினுற், கீறல்வேண்டுங்கிளர்மணிப்பூணினய். (௩௪)

என்னைவெஃகியெனலுமிராகவன், வின்னுனிக்கொடுவென்றிக்கலுழனுற்
பன்னகப்பிணிமுன்றுணிபட்டபோ, லுன்னுசேதுவுடைந்திடக்கீறினன். (௩௫)

ஊக்கமார்தனுக்கோடியுடைத்தலா, லாக்கினரிதற்கப்பெயராய்ந்துளார்
நீக்கிலாநெடுங்கீற்றிதுநேர்பட, நோக்கினர்பின்கருக்குழிநோக்கிலார். (௩௬)

வெய்தெனச்சிலைவெற்பின்கடையினுற், செய்தகீற்றினைக்கண்டவர்சேருவார்
பொய்தவிர்ந்தபுலத்தினைமூழ்குவா, ரெய்துமாண்பயன்யானறியேனரோ. (௩௭)

நன்மதைக்கரைநற்றவம்போற்றுவான், றன்மனத்தெழுபாதகஞ்சாய்த்திடுங்
கன்மலைத்தெழுகங்கையின்மாண்டவன், புன்மலச்சிறைநீக்கிப்புனிதனும். (கூஅ)

குருகிலத்திற்கொடைபுரிவான்செயும், பெருமறைப்பிரமக்கொலைநீங்கிடு
மருவுகோன்புவளமலியீகைமற், றுருவிறத்தலென்றோதியமூன்றையும். (கூகூ)

கட்டுஞ்சேதுவிற்கார்முகக்கோடியி, லிட்டமோடுமிழைத்திடக்கிட்டுமேற்
கிட்டும்யாவையுங்கேழகன்முத்தியு, மொட்டுமைபமிதற்கிலையுண்மையே. (சo)

மாணிறீவினைவாட்டிடுமற்றிது, காணுமெல்லையிற்கார்முகக்கோடியாற்
பூணுக்கீற்றிதுபொன்னகர்மாலயன், ஞுணவூர்க்குப்புகுநெறிதானரோ. (சக)

மூள்விருப்பின்முயன்றிடுமாதவம், வேள்வியீகைவிளம்பிடுமந்திர
மாள்வினைச்செயறன்னிலதிகமா, நீள்பெரும்பயனீரிதுநல்குமால். (சஉ)

மோகமல்கியறம்பிறமுன்னியே, யாகம்வாட்டியென்னுழ்யமுனுநதி
நாகமாநதிநாப்பண்சென்றுடுமா, றேகல்வேண்டாவிதிற்படிவார்க்கரோ. (சங)

நாணுலாந்தனுக்கோடிநரரொதிர், காணில்வேண்டிலர்காசியின்மாரண
மூணிலான்றினமூன்றுதிலாடியான், மாணுலாம்பொருளீயான்வறியனும். (சச)

அச்சிலைப்பெருங்கோடியறலினை, நச்சியாடுநயனுடையார்பெற
வைச்சபேறுவனாவறுதக்கிணை, யெச்சகோடிகளீதலிலாவரோ. (சரு)

கோளிலாப்பதினுயிரங்கோடிநீ, ராளுமண்மிசையுள்ளவவையெலாந்
தாளுலாமலர்ச்சானகிதன்மண, வாளன்வார்தனுக்கோடியின்வைகுமால். (சகூ)

தேவர்முப்பத்துமூவருந்தேவர்சூழ், மூவராயமுதல்வருமங்கவர்
தேவிமாருந்திணிசிலைக்கோடியுண், மேவிநாளும்விருப்பினிருப்பரால். (சஎ)

முத்திபெற்றமுனிவருமோதபா, லத்தியுற்றவமுதனுந்தேவரும்
புத்திபெற்றதும்புண்ணியம்பெற்றதுஞ், சித்திபெற்றதுந்திண்சிலைக்கோடிவாய். சஅ

மூட்டுநாண்சிலைக்கோடியின்மூழ்கியே, யீட்டுதேவர்பிதிர்க்களிவர்தமை
யூட்டிவான்வினையாவுமொழிந்தவன், வீட்டின்வீடுறுமென்மையின்மேவுவான். சகூ

செருத்திறங்கெழுதிண்சிலைக்கோடிவா, யொருத்தன்யாவனொருமறையோற்குண
வருத்தினனவன்யாண்டுமழிவுறு, திருத்தும்பேரின்பநாட்டிலிருப்பனே. (ருo)

சாகமூலபலமுண்டுதம்முயிர், போகநீர்ப்பவர்புண்ணியமூழ்குவார்க்
காகுமாம்பவாடல்விற்கோடிநீர், யாகமாம்பரிமேதமிழைக்கிலார். (ருக)

ஆசினற்குலநால்வரினுடினோர், கூசிநீங்கும்பிறந்தைபின்கொள்கிலார்
மாசித்திங்கட்படிபவர்மாண்பயன், பேசிக்காட்டிடும்பீடிலன்யானரோ. (ருஉ)

வாய்ந்தமாகமதியினிலாடினோன், பாய்ந்துலாவும்பகிரதியாதிநீர்
தோய்ந்தவன்பலஞ்சொல்லினழிவிலா, தேய்ந்தநாடுற்றுவீடும்பினெய்துவான். ருங

புருடனுடினும்பொற்றொடியாடினு, மருடரும்படிவந்திடுநாண்மூத
லிருடரும்பயன்செய்தனயாவையு, மருடருந்தனுக்கோடியகற்றுமால். (ருச)

இறந்திடாவிமையோர்தங்குழாத்தினுட், சிறந்தகோசலைசெம்மலைப்போலவே
வறந்தடாதவளர்புனல்யாவினு, மறந்தருந்தனுக்கோடியதிகமால். (ருரு)

அங்கண்வார்தனுக்கோடியளித்திடு, மெங்கண்வேட்டவுமெல்லொருமுப்பதும்
வெங்கணிந்தியம்வென்றுயர்மாகவான், றிங்கண்மூழ்கிற்சிவபதஞ்சேரலாம். (ருசு)

உரமனத்தெழுசீற்றம்விட்டுளொரு, தரமயின்றுதடந்தனுக்கோடியில்
வரமளித்திடுமாசியிலாடுவான், பிரமகத்தியினீங்கிப்பிறங்குவான். (ருஎ)

மாசிமாதம்வயத்தனுக்கோடியி, லாசுதீரவடைந்ததிலாடியே
யீசர்கங்குலிலீரிருயாமமும், வீசியுண்டிவிழியுறங்காமலே. (ருஅ)

இந்தியங்களடக்கியிராகவன், முந்திறைஞ்சியமுக்கண்முதல்வனை
யுந்துபூசையுஞற்றித்திவாகரன், வந்துதோன்றிடும்வேலையின்மற்றநாள். (ருக)

கோடுசேர்தனுக்கோடிமுன்னீரொலா, மாடிநித்தநியமங்களாற்றியே
நீடிராமன்வழுத்துநிருத்தனைப், பாடியன்பிற்பரவிப்பணிந்தபின். (சு0)

ஒல்லுமாத்திரமொண்பொருண்மண்பசு, நல்லசெந்நெற்றிலமுதனல்கியே
வல்லவாறுமறையவர்க்கூட்டுவித், தல்லநீரவவரருள்பெற்றரோ. (சுக)

புகறலின்றிப்புரிகபின்பாரணம், பகருமிம்முறைபண்ணினர்க்கெம்பிரா
னகமடங்கவகற்றியளித்திடு, மிகபரங்களிரண்டினுமின்பமே. (சுஉ)

எவ்வகைத்தவருத்தங்களெய்தியு, மெய்வகுப்புறுமுத்திவிரும்பினோன்
றெய்வமாசிநற்றிங்களிலாடுவான், கவ்வைவெண்டிரைக்கார்முகக்கோடியில். சுக

மன்னுமத்தவுதயமகோதய, மென்னுமிங்கிவற்றிப்புனலாடினோன்
றன்னதீவினையாவையுஞ்சாய்த்திடு, முன்னுமின்பமுமுத்தியுமெய்துவான். (சுச)

செல்வமுத்தொழிற்றேவருமன்னவன், சொல்வயத்தர்தொகுத்தவிருதிறத்
தெல்வயங்குதயம்படிவார்க்கிலை, நல்வளங்கெழுஞாலத்துதயமே. (சுரு)

மற்றவர்க்குமனுமுதலானநூல், கற்றுச்செய்பரிகாரங்களின்றியே
யுற்றதீவினையோடுமுண்டாயிடும், பற்றுவேள்விப்பயன்கள்பண்ணுமலே. (சுசு)

கதிரிரண்டையும்பாந்தள்கவருநா, ளிதனிலாடிலிருபிறப்பாளர்தம்
வதையின்மாசறுமற்றவர்பெற்றிடுஞ், சிதைவில்பேற்றினைச்சேடனுஞ்செப்பிலான்.

இரவிதிங்களெனப்படுந்தேவரை, யரவமுண்டிடும்வேலையமிழ்ந்தினோர்
பரவுபாவப்பதாகினிபாற்றிடுங், குரவிர்காடனுக்கோடிதனம்பினால். (சுஅ)

காயும்வெண்கதிர்செங்கதிர்கட்செவிக், காயநல்லுணவாம்பொழுதாடினோர்
தூயதீர்த்தமுழுவதுந்தோய்ந்தவ, ரேயுமின்பமிவற்றையமில்லையே. (சுக)

ஆகலாலிங்குமங்குமளப்பிலாப், போகநல்கும்பொருதனுக்கோடியிற்
ருகமாற்றிடுந்தண்புனலாடுமா, றேகுவீரினிநீருமிருடிகாள். (எ0)

விற்பிறங்குமிராமன்விற்கோடியி, னற்பலந்தருபிண்டங்கனல்கினோன்
முற்பிதிர்க்களுதரமுடிவிலாக், கற்பகாலநிரம்பிக்களிப்பரால். (எக)

அண்டர்நாதனமர்கந்தமாதனங், கண்டசேதுக்கவுசலைசெய்கரங்
கொண்டவார்தனுக்கோடியிவற்றினிற், பிண்டமீந்தவர்க்கில்லைபிதிர்கடன். (எஉ)

மூவிடங்களுமுன்னிமுனிவிர்கா, டேவனூற்றுந்திறத்தனதென்புல
மேவினோர்தமிருணவிமோசனத், தாவினுமந்தமக்குளவாகுமால். (எஙு)

வேறு.

ஆதலிற்றனுக்கோடியிலாடுமாருருயிர்க்கிளைப்பாயினுமேகுவீர்
மாதடற்சிலைத்தேசிகனீடுசெய்மூரிவிற்பரித்தாமன்முன்னாடினான்
பாதகிக்கிளைக்காதலினாவிவான்போகவிட்டவத்திவினைபோக்கவே
பாதனைப்பவத்தீதறமாசவீர்தமக்கிசைத்தேமிவண்யாமரோ. (௭௬)

தனுக்கோடிச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௮௨௬.

---

# அசுவத்தாமாச்சருக்கம்.

---

கரகபாணியயனைநேர்கதியினீடுமுனிவரங்
துரகநேருயிர்த்தயர்ந்துறங்குகின்றுளார்தமை
விரகிலாதுகொன்றதுமீளவந்தவெம்பவந்
துரகதாமனீத்ததுஞ்சூதகேட்டல்வேண்டினோம். (௧)

வேதநான்குவகைசெயும்வியாதமாணவகவெமக்
கோதுநின்சொலமுதலுணவட்டலில்லையாகையா
லேதுவொன்றுமின்றிநீயெங்கண்மேலிருத்திடும்
போதருதவருளுற்புகலுகென்றுபோற்றினார். (௨)

என்றபோதுசூதனங்கிலங்குவாதராயணன்
மன்றவாசவனசநேர்மலர்ப்பதங்கள்வாழ்த்தியே
யொன்றுஞானமுனிவிர்காளுவகையோடுகேண்மினென்
றன்றியன்றவாறெலாமவர்க்குரைத்தன்மேயினான். (௩)

பண்டுபாண்டுமைந்தரும்பார்வையில்லிமைந்தருங்
கொண்டவேலைவையகங்கொள்ளுமாறுமாறதாய்
மண்டுபோர்விளைத்தநாள்வைகல்பத்தினளவிலே
விண்டுமேனிவீடுமன்வீடுமன்னினானரோ. (௪)

மேலையைந்துபகலிலேமெய்துரோணன்விட்டன
னாலிரண்டொடொன்பதினாகநாடுநண்ணினா
னேனுமங்கர்தம்பிரானெட்டுமேல்கொள்பத்திலே
சாலநீடுசெல்லியன்றனாதுறந்துபோயினான். (௫)

பாதிதத்துவத்தொகைபட்டவாணியத்திலே
யூதைகாளைகதையினாலூருவிண்டுடைந்துதா
னாதனும்பறுஞ்சினானந்தவேலையரசர்தாம்
போதுவார்கண்மெய்விடாய்போக்குமாறுபுரிகுவான். (௬)

மட்டிலாதமகிழ்வினார்வளைமுழக்கவருகுவார்
திட்டத்துய்மனீடுதண்சிகண்டிசிஞ்சயன்முனா
மிட்டமேவுமரசருமேனைவேந்தரனைவருஞ்
சட்டெனப்புகுந்துளார்தங்கடங்கள்பாசறை. (௭)

பின்னர்வீரரைவரும்பின்னைகேள்வன்சாத்தகி
யென்னுமந்தவிருவரோடிறங்கிடாதமவுலியான்
மன்னுமாடைமண்டபமருங்குசென்றுமேவினார்
வென்னிடாமிடைந்தகான்வெள்ளிடைக்கணுற்றபோல். (௮)

ஆண்டுறைந்தசண்டருமமாத்தியவிருத்தரும்
பூண்டுதாளிறைஞ்சினார்புயங்கவீரகேதன
னெண்டயங்குமிற்கனாரேமம்யாவும்வெளவியே
வேண்டுசெய்கையுவகையால்வீற்றிருத்தன்மேயினார். (௯)

கைவலங்கொடிகிரிசேர் காளமேகமேனியா
னைவரோடுமாயிடையாவதொன்றுகூறுவா
னுய்வதன்பொருட்டுநீருடையிருக்கையின்புற
னைவுறுமனம்மொடுநண்ணுமின்களென்றனன். (௧௦)

அறிவுகொண்டுசெய்வதென்றைவராழியானொடும்
புறனிலேகியாழ்பிலம்புகுந்துகொண்டபொருளைமீ
தெறிபுனற்கொளோகையாற்றெய்தியங்கணிரவெலாஞ்
செறுநர்மாளவென்றசீர்த்திருவினோடுமருவினார். (௧௧)

சுரிமுகஞ்சுலாயெழீஇத்துள்ளவீசிப்பாரெலாந்
தெரிவிலாதுசிதறிடுஞ்சீகரக்குழாங்கடா
மரியகண்ணனைவரோடணுகவந்தவளவிலாப்
புரிவினீடுமங்கலப்பொரியிறைத்தல்போலுமால். (௧௨)

ஆகுமந்நிசியினூடவணிருந்தகண்ணன்மு
னோகையாறுவீசுமாரொலிதரங்கமுவணமூர்
பாகவிண்டுவறிதிரேல்பள்ளிகொள்ளுமென்னவே
நாகநீடுநல்லணைநல்கல்போலமல்குமால். (௧௩)

அறுவையில்லதன்புறமைவரோடுமைவண
னுறுவதெண்ணியுற்றபினுற்றுளார்கள்கிருபனு
மறுவிலாதகிருதவன்மாவும்வாசித்தாமனுந்
தெறுவியாளதுவசனைச்சென்றுகங்குல்சேருமுன். (௧௪)

சேருமூவர்கான்மகன்செய்யவெய்யதண்டினா
லூருவிண்டுடைந்துவீழ்ந்துடல்புரண்டுமண்ணின்மே
லாரையும்வணங்குருவந்தன்மைந்தன்மூழ்குறுஞ்
சோரிவாரிகண்டுதாந்துன்பவாரிமூழ்கினார். (௧௫)

கதையின்வீமனறைதலாற்கவான்பிளந்துசோர்கறைப்
புதையுமேனிபூழியாற்போர்த்தநீடுபுரவல
னுதையவெற்பில்வீசிடுமூதைவீசுதூளுடற்
றுதையும்வாலசூரியன்றோற்றமென்னவைகினான். (௧௬)

கண்கலுழ்ந்தமூவரைக்கண்டுகண்ணிலான்மகன்
விண்கவிழ்ந்ததாரைபோல்விழிகள்சிந்தவெள்ளநீ
ரெண்கவன்றிரங்கினானினைதல்கண்டழுங்கியே
புண்கனலிறைத்தபோற்புரவித்தாமன்சீறியே. (௧௭)

டியவீமசேனனுங்காலினும்பல்கைக்கதை
படியினால்விழுந்தெழாதழுதுநெஞ்சுதழுதழுத்
தாடிவுகூர்சுயோதனற்கொன்றுகூறவெஃகியே
டியெனாவெகுண்டெழீஇயிவுளித்தாமனோதுவான். (கஅ)

வர்பாண்டுநல்கினோராயுமெந்தையாருயிர்
மைவழங்குநெஞ்சராய்வஞ்சமாற்றிவெளவினா
வ்வெனாதவத்தயனொன்னும்வேலையேறினும்
பெவியாளதுவசநின்பழங்கணாற்றிலேனியான். (க௯)

ருபகேண்மியாவெனைநீவிடுக்கிலின்றிராப்
ரிதிதோன்றுமுன்னரோபாண்டுமைந்தரொருவரு
மொருவலின்றுசிஞ்சயனோடொருமாலெதிர்
பொருதுகொல்வன்யான்செயும்புண்ணியத்தினாணையே. (உ0)

வேறு.

ணையதுகூறக்கேளாவிகற்றுரியோதனன்று
ணையதுசெய்வலென்னாவறல்பொழிவிழியாற்பார்த்து
ணைவனாங்கிருபன்றன்னைமுடங்குவிற்குரவனீன்ற
ணையனைநமதுதானைத்தலைவனாச்செய்தியென்றான். (உக)

அன்னவாறவனுமன்னோற்கன்றபிடேகஞ்செய்தான்
பின்னரக்குரிசிறன்னைத்தழீஇவிடைபெற்றுப்போற்றி
முன்னுசீர்ப்போசனோடுமூவரிருவோருமைவர்
பொன்னெடுந்துகிலின்மாடுபோயினார்பொழுதுபோமுன். (உஉ)

அஞ்சுபேராவிகொள்வானடைந்தவம்மூவர்தாங்க
ஞ்சுபேராகியன்னோரடலொலிக்கசனிகேட்ட
ஞ்சுகாலரவம்போலநலிவுறீஇநடுங்கிநெஞ்ச
ஞ்சுகாறடுமாறுற்றுநாடிப்பின்னோடினார்கள். (உ௩)

டினாரிளைப்புற்றங்கணொருசிறிதிருந்தார்தம்மு
னோடினார்மீளினம்மைநந்தியாவத்தமாலை
சூடினான்கொல்லுமென்னாத்துண்ணெனவெருவியுள்ளம்
வாடினார்மருங்குகண்டார்வளமலியடவியொன்று. (உ௪)

தாம்புடைமலர்கள்பூத்தகாமருதடங்களாலும்
பூம்பணைப்பொழில்களாலும்பொருசிறைப்பறவையாலும்
பாம்பிணையாளியெண்குமனைகரிகவையமாமுன்
றம்பலவிலங்கினாலுமணிகிளர்வல்லியாலும். (உ௫)

இடைவெளியின்றிமல்குமீர்ந்தளிர்க்கானநோக்கி
படைவதோரரணமாகவதனிடைப்புக்குத்தண்ணீர்
நடையில்வாம்புரவிக்கூட்டித்தாங்களுமுண்டியாங்கோர்
வடதருநீழல்காணாஉமான்றடந்தேரிழிந்தார். (உ௬)

இழிந்தடற்புனிதம்பண்ணியிருந்தனர்நியமமாற்றிக்
கழிந்ததுகதிருங்கங்குற்காலமுங்கலந்ததாட
லொழிந்தனபகற்சரிக்குமுயிரெலாமுறக்கமுற்ற
வெழுந்தனவுழிதர்கிற்குமிரவினிலுயிர்களெல்லாம். (உஎ)

ஆயிடையலக்கண்கூருமன்னவர்மூவர்தம்முட்
போயிடர்கிருபன்றானும்போசனும்பூமியென்னும்
பாயலிற்றுயின்றாரங்கட்பாய்பரித்தாமன்சீற்றத்
தீயினால்வெதும்பித்துஞ்சான்சிந்தைநோய்கொண்டிருந்தான். (௨௮)

கார்ப்புழைக்கரங்களாதிகலந்துறைவிலங்கினோதை
யேர்ப்புழைச்செவியிற்கேளாவிதுமுரசரவம்போலும்
போர்ப்பிறர்கொடிபோலன்றிப்பொறையினேன்புகழ்ப்பதாகை
யார்ப்பரித்திடுங்கொலென்றுவயர்வுறுமசுவத்தாமன். (௨௯)

தழைத்தடங்கானுலாவுந்தந்தியைக்காணாஉத்தண்டம்
புழைக்கரமாகவீமன்புக்கனனென்னவஞ்சும்
பிழைத்தனுமரிதிறந்தபிதாவினிமீள்வதில்லை
யிழைத்ததீதெற்றுக்கென்றுவிரங்கிடுமிவுளித்தாமன். (௩0)

நிசியெரிதாருவின்பானீடுமாலோடுஞ்சேர்ந்த
பசுமுகில்பார்த்தியாரோபடர்வனம்புக்கசெய்தி
விசயனுக்குரைத்தார்பொற்றேர்மீதடைந்திட்டானென்று
வசைவுறீஇமயங்கிச்சோருமாண்டகையசுவத்தாமன். (௩௧)

வயங்கரிமுதுகிலேறிமணித்தலைபிடுங்கலாற்று
துயங்கிநேர்கடுப்பிலோடியுற்றிடுமரையைநோக்கிச்
சயங்கிளர்நகுலனூருந்தாவுபோர்வாசியென்றுத்
துயங்கியுள்வாடியாகந்துளங்கிடுந்துரகத்தாமன். (௩௨)

சூழியினீங்கிவான்மேற்சுடர்நெடுவாளைதுள்ளிக்
காழிருள்கிழித்தசோதிகண்ணினுட்கலத்தல்காணு
வாழியசாதேவன்கைம்மருவலார்வரைகொண்மார்பம்
போழொளிவாளினுடிப்புலம்பிடும்புரவித்தாமன். (௩௩)

இரவினிலுறங்காதிவ்வாறிருந்துழியிவுளித்தாமன்
பரவுபல்காகந்துஞ்சும்பணைமலிகோளியின்மே
லுரமிகுங்கரியசெய்யவுருவுடனொலிக்கும்வெய்ய
குரலினைக்காட்டிச்செல்லுங்குராலினைக்குறித்துக்கண்டான். (௩௪)

பெரியவக்கூகைபின்னர்ப்பிறங்கொலியொன்றுசெய்து
விரிநிழற்கொம்பரூடுமேனியைமறைத்துவைகித்
திரியவுங்கொடிகளெல்லாந்திடுக்கிடவெழுந்துபற்றிக்
கரியவக்காக்கைக்கூட்டங்கலைத்துயிருண்டதன்றே. (௩௫)

கலைத்துயிருண்டுகாக்கைக்கால்களுந்தலையுமூக்கு
மலைத்திடுஞ்சிறையும்வாலுமடங்கலும்வேறுவேறு
வுலைத்துடன்பறித்துவீசியொருசிறிதிடமிலாம
லிலைத்தடங்கோளியெங்குமிறைத்தினிதிருந்ததம்மா. (௩௬)

முற்பகலிழைத்ததீமைமுற்றிடுங்கொடியர்தம்பாற்
பிற்பகலொருகால்வென்றோர்பின்னொருகாலந்தோற்பா
ரற்பர்கள்பலருமாற்றாராண்டகையொருவற்கென்னுஞ்
சொற்பொருடெளியயாருந்தொலைந்தனகாக்கையீட்டம். (௩௭)

ஆகுமச்செய்கைகண்டவப்பொழுதசுவத்தாமன்
டகையைக்குரவனுகக்கொண்டி தருயிற்றுமாற்ரு
லகியாமொருவனுகவிரவினில்விரவலார்க்கு
ாகாடளித்துமென்னுமனத்திடைவலித்தான்மன்னே. (௫௮)

ருமையுண்டைவர்நேர்சென்றமர்விளைத்தாவிகோட
லாருமைசேருபாயம்வேண்டுமுரககேதனன்றனேடும்
பருமிதம்பேசிவந்தேம்பிறழ்விலாதெந்தவாறும்
ருமிதங்கடைப்பிடித்தன் மன்னுயிரொவைக்குமுண்டால். (௫௯)

மன்னவனேவனிற்பார்மாயவஞ்சனையினுலுந்
துன்னலர்க்கோறன்மாண்பேசுயோதனன்றனையும்வீழ்த்தா
ரொன்னலர்புணர்ப்பினுலேயுங்குதுவன்றிமுன்னம்
பன்னுநூன்மரபுதேர்ந்தபண்டிதர்பகர்ந்ததுண்டால். (௬0)

ண்பவர்வழிநடப்போரோரிடத்திருப்போர்கங்குற்
கண்படுகின்றோர்மெய்யிற்களைமிகப்படைத்தோரொங்கும்
புண்படவடிபட்டுள்ளம்புழுங்குவார்போரிலாக்கை
மண்படவிழுந்தோர்கையின்மாண்படையிழந்தோர்தம்மை. (௬௧)

இறச்செயலாகும்வேண்டார்க்கியாமுமிவ்வாறுசெய்த
அறச்செயலென்றுதுஞ்சுமைவரைப்படுக்கவெண்ணிப்
பொறைச்செயற்கிருபனேடுபோசனையெழுப்பியாங்கோர்
முறைச்செயன்முகூர்த்தமொன்றுமுன்னுபுமொழியலுற்றான். (௬௨)

மன்னவர்மன்னனுகிவலியரின்வலியோனுகிப்
புன்மைதீர்புனிதனுகும்புயங்ககேதனனைக்கொன்ற
மொன்னலருபாயத்தாலேயுதைத்தனன்வீமனந்தோ
வெந்நிலையவர்களேனுமிறைஞ்சிடாமவுலிமீதே. (௬௩)

ஆதலினவர்தம்மையாடைவீடதனைநீங்கிப்
போதுறுவகைவளைத்துப்பொருகணைமாரிதூவிப்
பாதிநள்ளிரவிற்சென்றுபடுத்திடல்வேண்டுமென்று
னீதவனுவலக்கேளாவியல்புழிக்கிருபன்சொல்வான். (௬௪)

பொருவிறிதுரோணனல்கும்புண்ணியப்புதல்வகேண்மோ
தருமமன்றுறங்குவாரைத்தடிந்திடல்சயத்தேர்விட்டுக்
தருமுனையேதியின்றிக்கொய்யுளைநீத்தார்க்கோறல்
பெருமையன்றிழிப்பர்யாரும்பிழையிதுவிடுத்திபிள்ளாய். (௬௫)

வலம்புரித்தாமன்றுதைமனைவிகாந்தாரிமாறு
நலம்புரிவிதுரனின்னோர்நவிற்றிடிற்கோறுமென்றான்
சலம்புரிபுரவித்தாமன்றுனதுமறுத்துப்பின்னு
மலம்புரிகிருபனேடுமடங்கலினறைதலுற்றான். (௬௬)

முந்தைநாளாகவத்தின்முண்டபோர்ப்பாண்டுமைந்த
ரெந்தையைப்புணர்ப்பினுலேயின்னுயிர்கொண்டசெய்கை
சிந்தைநின்றீருமன்றிச்சிறியனுந்திட்டத்துய்மன்
றந்தையைக்கொன்றனென்றுசபையெதிர்சாற்றலாற்றேன். (௬௭)

மொய்வயப்போரிலெந்தைமுடிந்திடமுடித்ததன்றி
வைவயத்தானைவிட்டவரநதிமகனைச்செற்றான்
செய்வயப்பற்குனன்றான்சிகண்டியைத்தண்டமாக்கொண்
டைவரோயிடித்தார்முன்னரருநெறியறத்தின்கூலம். (சஅ)

மறுத்துரையாடலொன்றுமாதுலவின்றிராவி
லறுத்திடுகின்றேனந்தவைவரையறிதியென்று
நிறுத்தவாம்பரிகடம்மைநெடுங்கொடித்தேரிற்பூட்டிக்
கறுத்துளங்கடிதிலேறிக்கந்துகத்தாமன்போனான். (சகூ)

இருவருமவன்பின்பற்றியேகினாரிவுளித்தாமன்
கருகிருட்சீரையில்லின்கடைப்புறஞ்சென்றுநின்று
பெருகியகங்கைவேணிப்பிஞ்ஞகன்பாதஞ்சானித்
தருகினனளித்தானொள்வாளொன்றுமைநங்கைகேள்வன். (ருo)

வாளொளிவிளக்கமேந்திமடிமனைப்புகுவான்வாயிற்
கேளுறுகிருபனோடுகிருதவன்மாவைவைத்துத்
தோளிணைபணைப்பவெங்குஞ்சுற்றுபுதிரியாவல்லே
மீளுநீஇத்திட்டத்துய்மன்வியன்றுகில்வீட்டில்வந்தான். (ருக)

சென்றிவன்புகுதுமெல்லைத்திரள்புயத்திட்டத்துய்மன்
முன்றருவோர்களெல்லாமுயன்றபோரினைப்பினாலே
கன்றியதானையோடுங்கண்படைகொண்டாரங்கட்
டுன்றுவெண்டுகிலார்பள்ளித்துயிலும்பாஞ்சாலற்கண்டான். (ருஉ)

காண்டலுமுதைத்தான்காலாற்கண்டுயிலமளிநீங்கி
யாண்டெழுந்திவனைக்கண்டானவனவண்புரவித்தாமன்
மீண்டவன்குஞ்சிபற்றிமேதினிதன்னில்வீழ்த்திப்
பூண்டபூங்கழலான்மோதிப்புரட்டினன்புரளவாகம். (ருங)

அந்நிலைத்திட்டத்துய்மனச்சுரீஇயுறக்கநீங்கான்
றன்னுடல்பதைப்புறாமற்றளர்ந்தனனவன்களத்தை
வின்னெடுநாணாற்கட்டிமேழகமறுக்குமாபோற்
கன்னிகர்மார்பிலேறியரிந்தனன்கற்கித்தாமன். (ருச)

பதாகினிமுழுதுங்கொன்றுபாவைபாஞ்சாலிபால
ருதாமணியுச்சிகண்டியோங்குசோமகார்முன்னோர்
மதாசலம்புரவிகாலாண்மற்றவணுள்ளவெல்லாஞ்
சதாகதிசேர்தழற்போற்றடிந்தனன்றன்கைவாளால். (ருரு)

ஆடுபோர்க்கலக்கத்தஞ்சியாடைமண்டபத்தைநீங்கி
யோடுவார்தம்மைப்பற்றியுடன்றுரந்துயிர்குடித்தார்
நீடுயர்வாயினின்றநிருபனுங்கிருபன்றானும்
வீடுபேருழிவேலைபோன்றதக்கந்துல்வேலை. (ருசா)

அந்நிலம்மூவரிவ்வாறடுங்கொலையதனைநாடிக்
குந்திதன்புதல்வர்க்கஞ்சிக்குலைகுலைந்தவலங்கூரா
வுந்தியகடுப்பினோடியொருவரோடொருவர்கூடார்
சிந்தினார்சென்றார்செய்ததீவினைக்காறுரப்ப. (ருஎ)

வேறு.

தாவுவாம்பரித்தாமன்வெரீஇயுளம், பாறுமெல்லையிரேனையிற்பல்லவர்
தேறுதொல்கதைவேதசிவாகமங், கூறியங்கட்சுழீஇயிருந்தார்களால். (ருஅ)

சேர்த்தர்தங்கடிாள்கண்டவருழை, வேர்த்தமெய்யொடுமெல்லெனக்கிட்டினன்
தூர்த்தனிங்கிவன்சூழ்ந்திடுஞ்செய்கையைப், பார்த்துணர்ந்தனர்யோகபலத்தினால்.

செய்தபாவந்தெரிந்ததபோதன, ரெய்தனுக்கினர்வேதியவீனனே
கைதருந்துயிற்காவலர்க்கொன்றநீ, வெய்தெனப்படர்வேறொருசூழலில். (சுO)

நோக்கினாலுனையாங்களுநோன்பினை, யாக்குநீதிக்கயலவராகுவே
நாக்கினாலுனைநாடிநவிற்றிடி, னீக்கரும்பிரமக்கொலைசேர்ந்திடும். (சுக)

கேடுசேரினுந்தான்பிறர்கேட்டினை, நாடுமாறதுநன்மையன்றெம்மையுங்
கூடநின்னொடுங்கூட்டலைநீயிவ, ணீடநின்றிடனீங்குதியென்றனர். (சுஉ)

துங்கமாதவர்சொன்மொழிகேட்டலுந், தங்குமானத்தழலில்வெதும்பியே
யங்கணீங்கியேயச்சுவத்தாமனீள், கங்கையாறுகொள்காசியின்மேவினான். (சுங)

காசியாதிக்கடிநகரெங்கணும், வாசமேவுமறையவர்நிந்தனை
பேசநொந்துழிதந்துபெரிதுளங், கூசியாவிகுலைந்துலைகின்றநாள். (சுச)

நித்திரைக்கொலைசெய்பழிநீக்குவான், மைத்திரைப்புவியேத்திடமாமறை
முத்திரைப்பொருள்கண்டமுனிவனை, யெய்த்திரைக்குமிளைப்புடனெய்தினான். சுரு

ஏதமுன்னியொருமருங்கெய்தியே, காதலோடுசொரிந்திடக்கண்கணீர்
வேதவோதைவெதரிவனத்துறை, வாதராயணன்றாளில்வணங்கினான். (சுசு)

மறைவியாதன்வயப்பரித்தாமனை, யிறைதெரிந்துழியெய்தலையிங்குநீ
நிறையிருட்கண்படுக்குநிருபரை, முறையினீங்கிமுடித்தபதகனே. (சுஎ)

பெருகும்பாதகமுன்னுடன்பேசினு, மருகுறுதெமதாசிரமந்தனைத்
திருமியேகுதியென்றலுந்திண்சிலைக், குருவினும்பல்குலைந்துளங்கூறுவான். (சுஅ)

உன்றனைச்சரண்கூறியுறுமெனை, நின்றனைக்கிலைநீத்திடிலானினங்
கன்றனைத்திடாகாளையர்தங்கள்பா, லின்றனைக்குமிரக்கமின்றாகுமால். (சுகூ)

நீரம்வாரிநெடுங்கரையேற்றினு, ஞாமாருயிர்நல்குநர்வேறெவர்
சேரவானிற்செழுந்தருவீசினு, லாரவண்பறவைக்கரணாகுவார். (எO)

இழித்தியாருந்துரப்பவிரங்கியா, ணெழித்திடாயென்றனைப்புகலுற்றனன்
கொழித்தமாமறைக்கோலவியாதநீ, பழித்திடாதருண்மற்றொருபற்றிலேன். (எக)

முற்றுமுற்றவுணர்ந்தமுதுக்குறை, வுற்றவேதவியாதவுனக்கியான் [தே.
சொற்றல்வேண்டுங்கொல்சோர்ந்தவர்கண்ணதே, கற்றமேலவர்கண்ணருளென்ப

நீவிடாதெனையாளநினைகெனாத், தாவுவாம்பரித்தாமனிறைஞ்சலும்
பாவியாநின்றுபாணிப்பப்பன்மறை, மாவியாதன்மனங்கரைந்தோதுவான். (எங)

யாதினும்பரிகாரமிதற்கிலை, கோதுநீங்குமுபாயமுங்கூறலாஞ்
சேதுவின்கட்செழுந்தனுக்கோடியென், றோதவாரியிலுண்டொருதீர்த்தமே. (எச)

தொன்மைஞாலந்துதிப்பவிளங்கிடு, நன்மையென்னுமுழுவதுநல்கிடும்
புன்மையாவையும்போக்கிடும்புண்ணியத், தன்மையாலுயர்சார்பிற்சிறந்திடும். எரு

ஒற்கநீக்குமுளம்வெளிசெய்திடுஞ், சொற்கமீயுந்துயரந்துடைத்திடும்
வற்கநீடுமருட்பவ்மாற்றிடு, மற்கடிந்தருளானந்தநல்கிடும். (௭௬)

தூரிசுகாட்டுஞ்சுவன*மொழித்திடுங், கரிசுதீர்க்குங்கடவுளர்போற்றிடும்
பரிசுநல்குந்தசரதன்பாலனுங், குரிசிலேந்துகுனிசிலைக்கோடியே. (௭௭)

சாந்தியாதிதவநெறிதந்திடு, மாந்தர்காலவரைக்கிடைநாளிலே
வீந்திடாமையும்வென்றியுமீமிசை, யேய்ந்தவர்யுளுமின்புங்கொடுத்திடும். (௭௮)

ஓங்குமேன்மையுரையிலடங்கிடா, வாங்குவார்தனுக்கோடியின்மாதமொன்
றுங்கணெய்தியிடையின்றமிழ்ந்தினு, னீங்குநித்திரைச்செய்தநெடுங்கொலை. (௭௯)

என்றுவேதவியாதனியம்பலு, மன்றுவாம்பரித்தாமனதனுழைச்
சென்றுவைகலிடையின்றித்திங்களி, லொன்றுமூழ்கினன்சங்கற்பமோதியே.(௮0)

காலமூன்றுங்கவுசலைகான்முளை, மாலொழித்தவரதனைப்போற்றவா
னேலுந்திங்களிறுதித்தினத்தினிற், கூலமார்தனுக்கோடியிலாடியே. (௮௧)

ஈசனஞ்செழுத்தெண்ணியிருந்துப, வாசமாகவருந்துயின்மாற்றியே
வீசுபானுவிரிந்தெழும்வேலையிற், கோசலேசன்விற்கோடிகுடைந்தரோ. (௮௨)

அன்றிராமனருச்சனைசெய்திடுங், குன்றவிற்கைக்குழகன்றிருமுன
நின்றுமார்பநிறைத்திடக்கண்கணீர், நன்றுசேரின்பக்கூத்துநடித்தனன். (௮௩)

ஆடல்செய்திடுமன்பினைநோக்கியே, பாடல்விஞ்சையர்பண்ணவர்சூழ்ந்திட
வேடுலாங்குழலேழையொடெய்தினன்,கோடற்றுமன்முன்கொன்றையந்தாமனே

வந்துநின்றவளர்மறையுச்சிமேற், செந்தனிப்பொருட்செல்வத்தைக்காண்டலு
முந்துவாம்பரித்தாமனுருகிநெஞ், சிந்துவேணியன்றுள்பணிந்தேத்துவான். (௮௫)

ஆடுகாலவகாலவன்றம்புய, னுடுசேகரநற்கருணாகர
பாடுசாமமெய்ப்பாதிகொள்சாமமா, னீடுமத்தநெடுந்தொடைமத்தனே. (௮௬)

தீயகங்கையாய்சென்னியிற்கங்கையாய்,தூயசோதியாய்தொண்டரைச்சோதியாய்
தாயினல்லனேசார்புளனல்லனே, யாயகண்டனேயல்லுறழ்கண்டனே. (௮௭)

அன்பர்க்கண்ணியாயம்புலிக்கண்ணியா, யென்பின்றாரினுயெண்கடித்தாரினுய்
பொன்கொள்வேணியாய்போதகவேணியா, யின்பவீட்டினுயென்பவம்வீட்டினுய்.

பாகவில்லனேபற்பதவில்லனே, மாகநாதனேமாமறைநாதனே
வேகவானனேவேங்கைக்கவானனே, நாகநேத்திராநன்னுதனேத்திரா. (௮௯)

கம்புட்காதினுய்காமனைக்காதினுய், செம்பொற்பாதனேசெப்புநாற்பாதனே
யும்பர்க்கும்பனேயோர்முலைக்கும்பனே, யம்புமாலனேயார்தருமாலனே. (௯0)

என்னையாளவென்றேமுலகீன்றிடு, மன்னையோடுமடைந்தனையையனே
முன்னைமாலயன்காணருமூர்த்தியா, முன்னையான்றெழச்செய்தவமுள்ளதே. ௯௧

போற்றிபோற்றிபுயங்கபுராதன, போற்றிபோற்றிபொருவிரிபூரண
போற்றிபோற்றிபுரவெனப்போற்றினு, னேற்றினுன்மகிழ்ந்துள்ளமியம்புவான்.()

வருதிவாம்பரித்தாமவுறங்கிடு, நிருபனைக்கொன்னெடும்பழிநீங்கினு [றுன்.
யொருவர்முன்புநாமுற்றுழியன்னவர்க், கருமையொன்றிலைவேண்டிற்றறைகென்

* சுவப்பனமென்பது—சுவனமென நின்றது.

...ட்பழிச்சிசெடும்பவநீங்கினேன், சிற்பரம்பரமவ்வன்றெரிசன
முற்பிறங்கருணல்லறமுற்றிலார்க், குற்பவங்களிற்கோடியுதவுமால். (௯௪)

ஆண்டுசோதித்தணையடிநேயமே, வேண்டும்வேறிலைவேண்டுவதிங்கெனுத்
தாண்டுங்கொய்யுளைத்தாமன்வணங்கினு, னண்டநாதனுமவ்வரநல்கினன். (௯௫)

வள்ளலன்னவன்காணமறைந்தனன், றுள்ளுகந்துகத்தாமனுஞ்சூழ்வினை
யள்ளனீங்கினனன்றுதொட்டந்தண, எள்ளலின்றெதிரேற்றனர்யாவரும். (௯௬)

வேறு.

வருகிர்மாதவிர்வாம்பரித்தாமனோர்வளரிராகவன்வான்றனுக்கோடிநீர்
பிரிவிலாதெழும்வாஞ்சையுற்றுநீள்பெருமையாலிடர்தீர்ந்தருட்கூடினன்
விரிவினாலினிதீங்குமக்கோதினேம்விளைவெலாமிதுதான்றலைக்காதினாற்
பருகுவாரெவர்தாம்படிப்பார்கடாம்பரமகாரணர்பூங்கழற்சேர்வரே. (௯௭)

அசுவத்தாமாச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௯௨௫.

# தருமகுத்தச்சருக்கம்.

அரியமாதவர்தம்மையங்கெதிர்சூதனோக்கினனன்பினாற்
றிரியவுந்தனுக்கோடிநீரதன்மேன்மையொன்றதுசெப்புவான்
பரிவினாடுதிர்பண்டோர்மன்னவனுண்டவன்பெயர்பகருவார்
தருமகுத்தனெனுமதிக்குலநந்தனல்கியதனயனே. (௧)

வாளில்வைத்திடும்வென்றிவாம்பரிமன்னன்மன்னவர்சென்னிதன்
றாளில்வைத்திடுநந்தனந்தமிறைமகட்கருடந்திடு
நாளில்வைத்திடுநல்வளங்கெழுஞாலமங்கையைநீடுசேய்
தோளில்வைத்தடல்வாயில்வேடுவர்சூழ்புலப்பகைசாடியே. (௨)

உண்டுணவிலியூணொரீஇத்தவமுன்னிநீள்வனமுற்றனன்
வண்டுணாறவொழுகுதார்ப்புயமைந்தனும்பினர்மாதவீர்
மீண்டுநாடுபுநேருநேரலர்வென்கொடுத்திடமுன்கொடாக்
கொண்டுநாடுபுநீதிநூன்முறைகுவலயம்புரவுற்றனன். (௩)

அமையமன்னதில்வேள்வியெண்ணிலவமரர்நாயகனாதியோர்
தமதுசிந்தனைமகிழ்வுறும்படிதானிழைத்தனனந்தணர்க்
கிமிழ்திரைப்புனலூருமேமமுமீந்தளித்தனனாதலாற்
சுமைநிலத்தவர்தத்தமக்கியறுறைவழாநெறிதுன்னினார். (௪)

கருதுநெஞ்சுறுகள்வருங்கொலைகளவுசெய்திலர்காசினி
நிருபனாகியதருமகுத்தனுநீர்மையிற்பிறழாமலே
பெருகுபார்மகடுயர்தணித்திசைபெருகவைகுறும்வைகலின்
மிருகவேட்டையின்வெஃகிவாசியின்மேற்கொளாவனமேவினான். (௫)

வேரின்வாய்கமழ்பலவுசண்பகம்வெண்டுணர்ப்புனைமாதுளங்
தாரவேவளர்வேங்கைகோங்கொடுதூங்குதீங்கனியோங்குமாப்
பாரநீபமசோகுபச்சிலைபன்னிபூங்குமிழ்பாடல
மாரமாரகிலானெருங்கிடுமரசுமேவியவடவியே. (௬)

நவசரோருகநாண்மலர்க்கருநாசவண்டினமொய்த்தலாற்
கவருநல்லிசையாழினிற்றிகழ்காமர்பத்தரின்மல்கவே
யிவருநீண்முகைமாடகம்புரையேரிலஞ்சியதெங்கணுங்
குவலயம்பொலிவெய்தவந்தருள்குரிசின்மேவியகானமே. (௭)

கம்பமைக்கடவருவிதூங்கிடுகரவரைக்குலமெங்கணும்
வெம்பழற்பொறிசிந்துசெஞ்சுடர்வெங்கணெண்கினமெங்கணுங்
கொம்பினிற்புரிதிருகினிற்குதிகொண்டுலாங்கலையெங்கணு
மம்புலித்திருமரபினீடுலகாளிமேவியவடவியே. (௮)

பாங்குபூங்கிளிபாடவாடல்செய்பச்சைமாமயிலெங்கணு
ஞாங்கர்வண்டிசையோடுதெள்ளிசைநாடுகோகிலமெங்கணுந்
தூங்குபஞ்சரவூசலாடுபுகுழ்குரீஇயினமெங்கணு
மோங்குதோள்வலியானொர்துங்கவுதாரிமேவியகானமே. (௯)

புறமகத்துறையாகமேதகுபுண்ணியத்துறையுட்படுந்
திறமகத்துறைபலகலைத்துறைசீர்மறைத்துறைதிரிபுசான்
மறமகத்துறையாவருட்டுறைமருவுமாதவர்வாழ்வதா
மறமகத்தியன்மன்னனத்திரியோடடைந்திடுமடவியே. (௧௦)

ஆயிடைத்திரிகாலையெல்லியடைந்ததண்ணலுமந்திவாய்
நேயமிக்குயர்சந்தியின்கடனெறிமுடித்தருணிவொடுங்
காயமேற்றிரிகொண்டமந்திரமெண்ணிவெம்புலிகானமார்
சீயமஞ்சுபுதாருவின்மிசைசென்றிருந்தனனன்றரோ. (௧௧)

வேறு.

ஆங்கணுளியமொன்றதுதானடங்காமடங்கலது துரப்ப
வேங்கிநடுங்கியிளைத்தோடியிறைவனிருக்கும்பாதவத்தி
னேங்குகடுப்பினுடனேறியுலகமுழுதுமொருகுடைக்கீழ்த்
தாங்குந்தருமகுத்தனெனுஞ்சயவாளரியைக்கண்டுரைக்கும். (௧௨)

வெருவாதொழிதிவேல்வேந்தேவிடபியிதன்கண்விடிவளவு
மிருவேமிருத்துமரத்தடியிலிருக்குமரியொன்றெல்லியிதி
லொருபாதியும்யான்விழித்திருப்பவுறங்குநீமற்றொருபாதி
யிருபாதுயில்வன்யான்விழித்துநீயிங்கிருத்தியென்றதுவே. (௧௩)

நன்றென்றுளங்கொண்டுயிர்பிழைப்பானந்தன்மகனுநத்தமதி
லொன்றுபாதிவிழிதுயின்றுனுளியம்புரப்பவதுபோழ்தில்
வென்றிமடங்கல்விளித்தெண்கைவிடுவாய்தள்ளிவேந்தனைநீ
யென்றுநரரின்மிகக்கொடியரிறைவனொனலுமியற்பல்லம். (௧௪)

வயமாவதனையெதிர்நோக்கிவனத்திற்றிரியுநீயொன்று
நயமாரறத்தின்றிறமறியாய்நம்பினோரைக்கொலைபுரிந்தோர்
பயமார்நிரயப்படுகுழியிற்படிவர்பகரும்பழிநீங்கி
யுயமாமகங்களோராயுதமுஞற்றினுமொழியாதால். (௧௫)

னவக்கொலைமுன்பாதகங்கள்பாற்றற்குளதுபரிகாரம்
னைநம்பினரைவதைத்தபவஞ்சாடர்நரக்குந்நவமில்லை
னகவரையும்பெரிதன்றுகருதுங்காலைக்காதலினுன்
ணநண்புடையாருயிர்கவரும்வஞ்சம்பெரிதாமென்றிடலும். (க௬)

ல்லமொழிகேட்டெதிர்மாற்றம்பகராதிருந்ததடன்மடங்கல்
வல்லுமயில்வேற்றருமகுத்தன்விழித்தானதன்பின்விறலுளியம்
ல்லையிருகண்டுயின்றதவண்மன்னன்மகனைவயப்புலிபார்த்
தால்லையிதனைத்தள்ளுதிநீயொழிந்தாலிடையூறுனக்கெய்தும். (க௭)

ன்னையெனிலிங்கிசைத்திடுவனிரவியெழுந்தாலியான்போவன்
ன்னையுளியம்பயந்திரும்பிறழ்வாளுகிர்சேர்பெருவிலங்கு
ன்னைத்துணியேலிஃதிறந்தாற்சாரும்பகைவேறிலைவிடியா
முன்னம்விடுதிதள்ளியெனமொழியவிறைவன்முறைதேரான். (க௮)

டியிலுறங்குங்கரடிதனைமறங்கூர்வயமாவிருக்குமரத்
டியில்விழத்தான்றள்ளுதலுமழியாவறனுண்டாகையினு
லாடிவினகத்தாற்பசும்பனைமேலூன்றிக்கரங்களுறத்தழுவிப்
டியில்வழுவாதுய்ந்ததுயிர்பல்லம்விதிக்கார்பதியாவார். (க௯)

னைத்தாங்காலையதுசீறியரசன்மதலாயறம்பிழைத்தா
யனைத்தோர்பிழையமுனக்கிழைத்தேனில்லையிருதுவிருங்குலத்தே
னைத்தாலடைவேனெவ்வடிவுநீடுந்தவத்தாலெண்குருவங்
னைத்தானெடுத்தேன்விளையாட்டாற்சானகாட்டன்பெயர்கண்டாய். (உ0)

ஊகித்துணராதுறங்குமெனையொழித்தபவத்தாலுன்மத்த
ஞகித்திரிநீவனத்திடையென்றரசனடுங்கவருஞ்சாபம்
வகித்துரைத்துவிறலுளியமிருகபதிதன்முகநாடி
யாகிற்சிறந்ததலைமையினுலுண்மைதெரிந்துரைசெய்யும். (உக)

ளகைபுரக்குமந்திரியாமவன்மந்திரிமாவரசல்லை
தளகுண்கரிசூழிமகிரிநீகுறுகியொருநாட்குலமடவாள்
ளகமதுடமுலைதோயும்புரிவாலொன்றும்புலங்கொள்ளா
துளசுபுரையுமுன்கையவளொடும்விளையாட்டுற்றனையால். (உஉ)

சுபுனையாக்கௌதமன்றனெச்சமதற்காஞ்சமித்தொடிப்பான்
ாசுபுனையங்கண்டருக்கோர்தன்னியுதவுங்கரும்படமா
ாசுபுனையும்வரையதன்கண்வந்தானுனதுமணிமருங்குற்
ராசுபுனையாவிலைகாணாஉத்தயர்கூரரியாகெனச்சபித்தான். (உ௩)

பெற்றுயதனல்விலங்குருவம்பேர்பத்திரனுமுனக்கந்நா
ாற்றூர்க்கருளுமளகையர்கோனறத்திற்றிரியானவன்பாங்க
நற்றுரொவருமத்தகையருபிரிங்கெனைநீயுணலாமோ
விற்றுமனைத்துஞ்சமாதியினுலெண்ணினேனென்றியம்பியதால். (உச)

பல்லமினையபல்லமொழிபகரக்கேட்டுப்பத்திரனைய்
வல்லைமடங்கலுருவகற்றிவயங்குந்தனதன்மந்திரியுஞ்
சொல்லுமுளியந்தனைப்போற்றிச்சூழுஞ்சாபக்கௌதமனு
நல்லமொழிநின்னுடனெனக்காநாணீங்கிடுமீதெனநவின்றான். (உரு)

சிங்கவுருவந்தீர்ந்ததனாற்றேர்ந்தேன்சானகாட்டனென
விங்குன்றனைநானெனவணங்கியெண்குமுனியையேமவொளி
யங்கண்விமானந்தனிலேறியளகையடைந்தானதன்பின்னர்த்
தங்குநெறியாலெவ்விடத்துஞ்சானகாட்டன்சரித்தனால். (உசு)

தருமகுத்தனுன்மத்தன்றானாய்நகரந்தனையடைந்தான்
கருமந்தெளியுமமைச்சரவற்காணூஉரோவைக்களாவிருக்கு
மொருமைமனங்கூர்தந்தையுழையுடன்கொண்டணுகியுளமருட்கை
வருமந்நெறிசொற்றெதிர்விடுத்துமன்னன்றிருமுன்வணங்கினார். (உஎ)

அரசனவனுஞ்சைமினிதாளரியமகனோடணைந்திறைஞ்சி
யுரைசெய்திவனுக்குன்மத்தமொழியுமுபாயமுரையென்றான்
வரைசெய்தளப்பின்மறைவகுத்தோன்மாணவகன்கேட்டுளப்போதிற்
புரைசெய்மருடீர்பரஞ்சுடரைப்பொழுதுநீடப்புணர்ந்தறைவான். (உஅ)

சானகாட்டன்சாபத்தாற்சார்ந்ததிதுதான்றனிவேட்டை
போனகாட்டிற்கைகேசிபோற்றாருழிநைபுகுதுபவ
மானகாட்டிற்போதியெனவந்தோன்வயவிற்கோடியிதற
கானகாட்டைபிறிதொன்றாலகலாதலைகயாகையினால். (உகூ)

நாணிற்சிறந்ததனுக்கோடிநன்றாமெவற்றுநன்றாகுஞ்
சேணிற்சிறந்தவீடுதருஞ்செல்வம்பெருக்குந்தீங்கொருக்குங்
காணிற்சிறந்தமறைபகருங்காட்சித்ததனாற்கழல்வேந்தே
பூணிற்சிறந்தபுதல்வனொடும்போதியவணீயெனப்புகன்றான். (௩0)

வேந்துமுனியுஞ்சைமினிதாள்வீழ்ந்துபணிந்துதனுக்கோடி
போந்துமதலையொடுநியமம்போற்றிப்படிந்தானெழுமுன்னங்
காந்துஞ்சுழல்கட்கடிநீங்கிக்கடிதினகன்றதலைக்கங்கை
யேந்துமவுலிக்கோசலைசேயிறையையிறைஞ்சியிருந்தொருநாள். (௩க)

மகனைவிடைகொண்டிறையிருடிவனத்திற்புகுந்தான்மற்றங்கட்
டகவினீடுந்தருமகுத்தன்றானுவிராமநாயகனுக்
ககலுள்பலவுமாடகமுமணியாடைகளுமவைபிறவு
மிகவுமுதவிவிப்பிரர்தாம்வேண்டுவனவுங்கொடுத்தன்பால். (௩உ)

ஏனாதியரோடணிநகரமெய்தியிடர்நீத்தின்பினொடு
மானாதளித்தான்கடலாடையகலமறத்தினகலாமற்
கானார்மருள்கூருன்மத்தங்கடியகுமரகண்டன்முதற்
கூனார்கொடுங்காற்றனுக்கோடிகுடையுமவர்பாலடையாவே. (௩௩)

சரதமிதுமற்றிருகாலுஞ்சாற்றுகின்றேந்தனுக்கோடி
வரதமணிநீர்துறந்தயனீர்வாஞ்சைபுரிவான்பத்திரையி
னிரதநறும்பால்கிடைத்திருக்கவிரந்துதிரிவான்கள்ளியின்பால்
விரதமருவுஞ்சுடர்ஞானவிளக்கிற்றிகழும்விழியுடையீர். (௩௪)

மொழியும்பிறநீர்தனின்முக்கான்மொழியாவிதன்பேர்மூழ்கினரு
வழியுங்கமலமலரயனார்வாழுந்திருவின்வளமெய்தும்
பொழியுந்தருணநிலாமவுலிப்பொருளிற்பிறிதாம்பொருளனைத்து
மொழியுநிலையுந்தவநெறிநின்றொழியாநிலையுமுடையீர்காள். (௩ரு)

வேறு.

ாரணகற்றார்தூயசீர்முனிவிர்மற்றிங்கோதினே
ிருசெவிக்கொண்டோர்கள்பாலிரணியத்தின்சோரமே
ரமகத்தின்கேண்மையோர்பழியனைத்தும்பாறவே
ருமறத்தின்றுரைத்தியாந்தருமகுத்தன்காதையே. (௯௬)

தருமகுத்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௧௫௧.

---

# பராவசுச்சருக்கம்.

---

பர்திகழ்சூதன்மறித்தும்விருப்பொடுபேசுற்றான்
றருமின்மாதவிரற்புதமேசகுதிருமல்கும்
பார்சிலைநீடியகோடியிலுண்டொருவளனின்னும்
பாரதிலுண்டுபராவசுவென்றொருபணவன்றான். (௧)

ஆதியநான்மறையோதியுணர்ந்தவனவனோர்நாட்
டாதையையின்னனெனத்தெரியாதுயிர்தானுண்டான்
ீததுதீர்ந்ததுகோசலையேந்தல்சிலைக்கோடி
யாதனநீர்தனிலாடுபுமற்றஃதுனைசெய்கேம். (௨)

அவ்வகைசொல்வுழியந்தணனையனையறியாம
லுவ்வகைசெற்றதுவிற்றருகோடியினுதகந்தோய்ந்
திவ்வகைபாவமுருக்கியதென்றதனியல்பெல்லா
மெய்வகைமாதவர்சூதவிரித்துவிளம்பென்றார். (௩)

சென்றுவிளம்மொழியஞ்செவியூடுசெலச்சூத
னன்றெதிர்கூறுமவர்க்கடல்சேர்பிருகத்துய்ம
னென்றொருமன்னவனுண்டவனீள்கடலிடமெங்கு
நன்றுணர்நீதிவழிப்புரவுற்றனனகைவேலான். (௪)

சத்திரவேள்வியினிந்திரனாதியர்தமைவென்றோன்
முத்தியுணர்ந்தரயிப்பியனென்பவன்முடிமன்னன்
சித்தம்விருப்புறுதேசிகனாய்மிகுசெயல்வேள்விக்
கொத்தவைமுற்றுநடத்துமறைத்துறைகொண்டுள்ளான். (௫)

அருவாவசுநீடுபராவசுவெனமைந்த
ரோரிருவோருளரன்னரயிப்பியனுதவுற்றோ
ராரணநான்கதனங்கமொராறதனளவாகு
நேரியநுண்பொருணூலவையாவுநிறைந்துள்ளார். (௬)

கங்கையினீடுபுகழ்க்கொடைசேர்பிருகத்துய்ம
னிங்கணைவீருயர்சத்திரவேள்வியிழைப்பானென்
றங்கவர்தம்மையழைத்தலுமையனதருள்பெற்றே
பொங்குமருத்துவர்போலொளிமிக்கவர்புக்காரால். (௭)

ஏசறுதந்தைரயிப்பியன்முன்னவனில்லாளோ
டாசிரமத்தினிருந்தனன்மைந்தர்களவ்வேள்வி
மாசறவாற்றினர்மற்றதுகாணியவந்துற்றார்
காசறுமன்னன்விளித்திடமாதவர்கணமிக்கார். (௮)

ஆங்கவர்கோதமனத்திரிகாசிபனணியாழின்
வாங்கிசைநாரதனீடுபராசரன்மார்க்கண்டன்
றுங்குபுலத்தியன்குற்சன்வசிட்டன்சதானந்தன்
றூங்கொலிவேதவியாதனுடன்கிருதுர்த்தக்கன். (௯)

வைப்புலகத்தினெனும்புலகன்கவிவான்மீகி
தப்பிலரும்பொருணூலுணர்தௌமியன்சாபாலி
யெப்புவியும்புகழ்கௌசிகனென்பவரிவர்மைந்த
ரப்பெரியோரருண்மைந்தர்தம்மைந்தர்களளவில்லார். (௧௦)

உற்றிடுபண்ணவர்தம்மையருக்கியவுதகத்தான்
மற்றையநல்லுபசாரவிதத்தினின்மன்னன்று
னறற்மிலர்ச்சனையாற்றினன்வேள்வியதணிகாண்பான்
சுற்றியநான்குதிறங்கொள்பதாகினிசூழ்போத. (௧௧)

வேள்விசெயற்கியல்பல்பொருளோடுறும்விறல்வேந்த
ராள்வினைவண்மையொட்டிகள்வன்னிகளகம்வாழ்வோர்
கோள்வினைநீங்குபுகானிலமாதொடுகுறுகுற்றோர்
சூழ்வினைமுற்றும்விடுத்தவர்தாம்பிறர்சூழ்ந்துள்ளோர். (௧௨)

கூடினர்யாரையுமங்கவர்தன்மைகுறித்தண்ண
ணீடியபூசனைசெய்துபருப்பொடுநெய்தேன்பா
லோடியலைவகையுண்டிமணிக்குலமுடைபொன்பூ
ணேடியவேனவுநல்கிமகிழ்ச்சியினிறைவித்தான். (௧௩)

அச்சபையூடுரயிப்பியன்மைந்தரறத்தாற்று
லெச்சநடத்தவசிட்டனைமுன்னவரொதிர்காணூஉ
விச்சையின்வல்லுநரிங்கிவர்போலிலர்வேறென்று
வுச்சிதுளக்கினர்தொக்கவர்யாருமுவப்புற்றார். (௧௪)

ஆயிடைநீடுபராவசுவேள்வியதிற்சில்ல
மேயசெயற்புரிவுற்றனன்மூன்றும்வேலைக்கட்
சாயமகப்பணியீற்றிலகப்பணிதானுடிப்
போயினனாசிரமத்தொருதான்றனிபுரையில்லான். (௧௫)

ஏகுழிமாலிருண்மல்கியகாட்டினிலேணத்தோ
லாகமறைப்பவிருந்திடுதந்தையையறியானாய்
வேகவினைக்கொள்விலங்கிதுகொல்லும்விரைந்தென்று
வாகைபுனைந்தபராவசுநித்திரைமயலாலே. (௧௬)

உய்ந்துயிர்வாழ்தல்பொருட்டுரயிப்பியனுடல்செற்றான்
வந்தனையைத்தெரிவுற்றபினெந்தையைவதைசெய்தே
னிந்தமறக்கினியென்செயலென்றழுதிடர்கூரா
வந்தவினைக்கடனாற்றுபுபின்னையவன்றன்பால். (௧௭)

சென்றுணராதுயிர்தாதையைவாட்டியசெயல்சொற்று
ன்றவனுக்கம்வெதம்பியிடர்க்கடலாழ்ந்திட்டா
ின்றபராவசுவாங்கிளவன்முகநேர்நோக்கி
யொன்றனைகேண்மதியெம்பியெனுவிஃதுரைசெய்வான். (கஅ)

வாம்பரிமன்னனிழைத்திடுசத்திரமகமாற்றற்
கோம்படைசெய்தனமிப்பணிமுற்றுதலுன்றன்னை
லாம்பரிசன்றறியாதுயர்தாதையையடுபாவம்
போம்பரிகாரமுஞற்றலுமுள்ளம்புரிகிற்கும். (கசு)

ல்லையினீவிரதங்கொளல்வேண்டிடுமொருவேனு
யெல்லையில்சத்திரவேள்விமுடிக்குதல்யான்வல்லேன்
வல்லைகொனீயெனவோதலுமுன்னவன்மற்றன்றோன்
சொல்லைவினுயருவாவசுவாங்கெதிர்சொல்கின்றான். (உ0)

யேதுறல்யான்விரதம்பிரமக்கொலைபிரிவெய்த
வேதமிலாவகைசெய்துவல்சத்திரவெச்சத்தை
தவறின்றிமுடித்தியெனுமகிலைநீங்கிப்
போதுதல்செய்தனன்முன்னவன்வேள்விபுரிந்துற்றான். (உக)

வேறு.

ஆங்கணித்தகல்பின்னவனுண்டுபன்னிரண்டு
நீங்கிடாவிரதம்பிரமக்கொலைநீங்கும்
பாங்கிலாற்றுபுதகையொடும்வேள்வியிற்படர்ந்தா
னேங்குமுன்னவன்கண்டவணரசனேடுரைப்பான். (உஉ)

தலைவகேளருவாவசுத்தானிவன்பிரமக்
கொலைபுரிந்தவன்சத்திரவேள்விசேர்கொள்கை
பிலையிவன்றனையிக்கணநீக்குதியின்றே
னிலைமைசான்மகம்பலித்திடாதென்றனுநிருபன். (உங)

இரவினீள்வனத்தையனைத்தான்கொறீங்கிரிய
விரதமாற்றியதம்பியர்க்குரைத்திடும்விரோத
வரவுதேர்கிலன்மன்னவன்மாமகச்சாலை
யொருவியேகெனவாங்கருவாவசுவுரைப்பான். (உச)

யானிழைத்திலனிப்பிரமக்கொலையென்முன்
றனிழைத்தனன்றன்பழிபாறிடத்தனக்கா
வானகோன்பியானுற்றினேனுறிரண்டாண்டு
மானவேலைமற்றிதுபடிறெனமன்னன். (உரு)

ஆர்வமுண்மையாற்பராவசுமேற்பழியாயான்
பேர்வைநீயெனப்பின்னருமிவனையேபிரித்தான்
சார்விலாதகறரணிகாத்தளிக்கினுந்தம்பாற்
சேர்வையோர்ப்புரந்தளிப்பதுமன்னவர்செயலே. (உசு)

நிருபனீத்தபினந்தணர்யாவருநீத்தார்
வெருவுகூரருவாவசுவேறொருவனம்போ
யொருவராற்றருந்தவமுதற்சிலபகலுஞற்றிப்
பொருவில்பானுவைநோக்கியோர்நோன்பதுபுரிந்தான். (உஎ)

னோன்பினாலிவனோதரும்பரிசினைநோக்கி
வான்பெருஞ்செயற்கரியதாந்திருவுளமகிழ்ந்து
தேன்பிறங்குதாரிந்திரன்முதலினோர்செறியத்
தான்புகுந்தனன்றரணியிலிலகுசீர்த்தரணி. (௨௮)

தஞ்சமில்புவிக்கொருதனிநாட்டமாய்த்தலைகெட்
டெஞ்சமாலிருளெழுதருமிரவியைக்காணூஉக்
கஞ்சமாமலர்மலர்த்திடுமவன்கழற்கஞ்சம்
வஞ்சமில்லருவாவசுவாழ்த்தினான்வணங்கி. (௨௯)

வணங்கிநின்றிடும்ராயிப்பியன்மகன்முகந்தெரிந்து
பிணங்கிறேவரும்பானுவும்பேசுவார்பிள்ளா
யிணங்குநின்பிரமசரியநிலைமையாலிழைக்குங்
குணங்கொண்மாதவக்கொள்கையான்மறைபயில்குறிப்பால். (௩௦)

புனிதனாயினைபராவசுப்பொய்மொழிபுகன்று
தனியகற்றவும்பொறுத்தனைதந்தையைக்கொன்ற
துனியொருங்கநீள்விரதமற்றவன்றனைச்சுட்டி
நனிபுரிந்தனைநவையுனக்கென்கொலோநவில்வார். (௩௧)

தாவிலுன்றனைக்கொள்ளுதுந்தள்ளுதுமவனை
நீவரம்பெறவேண்டியநிகழ்த்துதியென்றார்
தேவருஞ்சுடர்த்திவாகரச்செல்வனுஞ்சிந்தை
நோவுதீர்ந்தருவாவசுவவர்க்கெதிர்நுவல்வான். (௩௨)

ஐயனாருயிர்பெற்றெழுமவ்வரமருளிச்
செய்யவேண்டுவலென்றனனீந்துபின்றேவர்
பொய்யிலாயினமொருவரங்கேளெனப்புகன்றார்
மையறீரருள்சேரருவாவசுவகுப்பான். (௩௩)

தன்னையன்றனைத்தன்கையாற்றடிந்தவத்தவறு
முன்னையோனையும்விடவருள்வீரெனமொழிந்தான்
பன்னுவாரவர்தாதையாம்பனவனைக்கொன்றாற்
கென்னையோபரிகாரம்யாமியம்புவதினியே. (௩௪)

பெற்றவந்தணனாருயிர்கொன்றவப்பிழைதான்
மற்றொருத்தர்செய்தவத்தினான்மாறுமோமைந்தா
சொற்றிடப்புகிற்றான்றவமாற்றினுந்தொலையா
திற்றெனச்சொலுந்திறமிலோம்யாம்பரிகாரம். (௩௫)

என்னவோதியதேவரையெதிர்குறித்தேத்திப்
பின்னுமாங்கருவாவசுப்பேசுவான்பெரியீர்
முன்னுநும்பெருந்தகைமையாலுய்யவென்முன்னோ
னென்னைவெஃகியோருபாயநீரியம்புமினென்றான். (௩௬)

அவர்நெடிப்புறச்சானமுற்றிருந்துணர்ந்தவாசி
யுவரியின்கணாயிராகவனொளிர்திருக்கரத்துத்
தவர்கொள்கோடியென்றொருபுனலுண்டதன்றகைமை
யெவராளப்பவரில்லைமற்றதுதனக்கெல்லை. (௩௭)

வரமளித்திடும்வரம்பிலாவறம்பலவழங்கும்
பிரமகத்திதேம்பிரசமுண்பெரும்பவமரும்பொன்
காவுநீள்குருதற்பகமனங்கலப்பென்னப்
பரவுபாதகமைந்தையும்வல்லையிற்பாற்றும். (௩௮)

னாட்டமின்றியேபடியினுமப்புனலுணம்
வீட்டில்வைத்திடும்வெங்கணாகிவைவிளையா
காட்டுமெப்பொருட்காமமுங்கண்ணுதல்கயிலைக்
கோட்டிலேற்றிடுங்கோசலைமகன்றனுக்கோடி. (௩௯)

முரணுலாந்தனுக்கோடியென்றுரைத்திடின்முக்கா
லாரணமாயவற்கறம்பொருளின்பம்வீடளாக்கு
மிருணிக்கிடுமிப்பழியித்தனுக்கோடி
சரணமாவடைந்தாடினுலொழியுமுன்றமையன். (௪0)

மந்தணப்பொருளுனக்கிதுவகுத்தனமென்று
வந்தரத்தவர்தாமறைந்தந்தரம்போனு
ரிந்தவாற்றடைவடையவுமிளையவனெய்தி
முந்துநீத்திடுபராவசுத்தன்னுடன்மொழிந்தே. (௪௧)

அண்டர்சூழ்தனுக்கோடியினன்னவன்றன்னைக்
கொண்டிடன்படர்ந்சரியசங்கற்பமுங்கூறி
வெண்டிரைப்புனல்வீழ்ந்தமிழ்ந்தெழுந்திடும்வேலைக்
குண்டலம்பிறந்திட்டதோர்வடிவிலாக்கூற்று. (௪௨)

மாண்பராவசுகேண்மதிதந்தையைவதைத்த
வீண்பெரும்பவநரகினில்வீழ்த்திடாவண்ணஞ்
சேண்படர்ந்ததென்றதுவிஞ்சிச்சிந்தைநோய்தீர்ந்து
கோண்புணர்ந்திடாவிளவலோடுளங்களிகூர்ந்தே. (௪௩)

சராசனப்பெருங்கோடியைத்தலையினல்வணங்கி
யிராமநாதனையிணையடியிறைஞ்சிநின்றேத்திப்
பராவசுப்புகழ்த்தம்பியுந்தானுமாய்ப்பயந்தோன்
விராவுமாசிரமந்தனைமேவினர்விருப்பால். (௪௪)

மாய்ந்ததாதையுமெழுந்தனன்மைந்தரைக்கண்டா
னுய்ந்தமூவருமாயிடையின்பமுற்றமர்ந்தார்
சாய்ந்தமாண்டனுக்கோடியிலாடியதகையா
லீந்துளாரருள்பராவசுவிட்டிலாங்கெவரும். (௪௫)

வேறு.

எற்பராவருட்போதவறத்தினீரிப்பராவசுப்பாவமொழித்தவா
றற்பினுலுமக்காகவிற்றினேமற்பமார்சுரைப்பானமுதற்கணர்
பொற்பிலாவினைத்திமைகணத்திலேபுக்கபானுமுற்சேரிருளொப்பவே
கற்பரேலிசைக்காதிலடைப்பரோற்கைப்புருதவிக்காதையகற்றுமே. (௪௬)

**பராவசுச்சருக்கமுற்றிற்று.**

**ஆ திருவிருத்தம் ௨௦௦௫.**

---

# கவிசம்புச்சருக்கம்.

---

ஆங்கண்மீளவுஞ்சூதமாமுனியழிவில்பண்ணவர்குழுவைநாடியே
தாங்குவார்தனுக்கோடிநீர்வளஞ்சாற்றுவானெடுத்தேற்றமாதவீர்
நீங்கள்வம்மினோகேண்மினீரொருநீடுதெண்டிரையாடைவையமேற்
பாங்கிலோர்நரியோடுநண்புதான்பண்டொர்வானரங்கொண்டுவைகிடும். (க)

அன்றுமானுடமவையிரண்டுமுன்னர்தநாளினுமளவில்கேண்மையா
லொன்றிவாழ்ந்ததம்முண்மைதேர்தலாலுருவம்வேறுவேறுகமாறியுந்
தொன்றுநாடியேதோழமைக்கொளுந்தொடர்புநீங்குறுசுடலைதன்னிலே
நன்றுதாங்களித்துறையும்வேலையினரியைநாடிவானரநவிற்றிடும். (உ)

யாதுபாவநீமுந்தியற்றினையீமமேலிறந்திட்டபேர்கடங்
கோதுசேர்பிணத்தசையருந்துவாய்கூறுசம்புநீயென்றுகூறலு
மாதிதேர்வுறீஇயிகலனுங்கதற்கறையுமுள்ளவாறந்தநாளியான்
வேதநூல்களாகண்டவிப்பிரன்வேள்வியோடெலாவிதியுமோர்ந்துளேன். (ங)

மல்லறேவசன்மாவெனுமமோர்மறையவன்றனக்குதவிவாசகஞ்
சொல்லியீந்திலேன்றேருடமன்னதாற்சுடுவனத்தழன்றடியருந்துகே
னில்லையென்றிடாதேவராயினுமிடுதல்செப்பியேயீந்திடாரெனி
லல்லல்கூர்நரியாவரப்பொருளற்பமாயினுமதிகமாயினும். (ச)

நாடிநல்குவோமென்றுநல்கிடார்நச்சும்யாவையுநாசமாயிடும்
பேடிபான்மகப்பேறிலாமைபோற்பிறவிபத்திலாமறமுடன்கெடுங்
கோடியென்றுவேதியனையொன்றதன்கொடைபுரிந்திடார்கொண்டபாதகம்
பாடில்வாம்பரிமேதநூற்றினும்பாறிடாவெனக்கென்றுபாறுமோ. (ரு)

ஆகையாளரியாவதுண்மையேயந்தணாளருக்கருள்வழங்கியே
யீகைசெய்திடாருணர்வின்மேலையோரீதுமென்றதங்கீதல்வேண்டுவா
ரோகையாலெனுவோதியேநரியொன்றுகேள்கவியென்றுகூறிடு
நீகுரங்குருவானதென்கொலோநீடுபுட்குலஞ்சாடுகின்றியால். (சு)

நவிலுகென்றலும்வேதநாதனெனுமம்விச்சுவநாதனல்கினோ
னவமில்பேர்கமலாலயம்மனைக்கந்தணாளனானந்தநாளினு
மிவறனண்பினேம்யானுநீயுநீயிஃதுணர்ந்திடாயயானுணர்ந்துளேன்
சிவனையர்ச்சனைசெய்ததன்மையாற்றெரியுமுற்பவச்செயலெனக்கநாள். (எ)

கலைகொள்வேதியன்கறியைமுன்னியான்கரவுசெய்தவக்குறைவிடாமையா
லலைகொள்வானரமாயினேன்மறையாளர்தம்பொருளபகரிக்கொணு
விலையதற்குநேர்மிக்கபாதகமிருளுலாங்கடுத்தனையருந்தினோர்க்
கொலைசெயும்புவியமரர்தம்பொருள்குலமடங்கலுந்தொலைவுசெய்திடும். (அ)

அம்புவிக்குலத்தேவர்பண்ணியமபகரித்தவனளவையில்லநாட்
கும்பிபாகமுற்றெஞ்சுதீமையாற்கோடரத்துருக்கோடலுண்மையா
லிம்பரும்பர்தங்கூலம்வவ்விடாரியல்புணர்ந்துளோரிருபிறப்பினோர்
தம்புறஞ்சொலார்குறைநினைந்திடார்தவறுசெய்யினுந்தாம்பொறுப்பரோ. (கூ)

வாலா நல்குரவாளரீகிலார் மறையுணர்ந்திலாரெனினுமற்றவர்
பாலொருதவமானமாற்றுதல்பணவர்சீறினுலனலைமானுவா
ரேலுமன்புசாலினியநண்பினைமிகலகேண்மியாவிப்பிறப்பினிற்
காலமுன்றினிற்சென்றகாலையிற்காரியஞ்சிலகாண்பதின்றியே. (௧0)

வரவுகாண்கிலேனென்னதீமையோவஞ்சவிப்பிறப்பெஞ்சுமெந்தநாள்
விரவுநோய்ப்பிறப்பிஃதகற்றுவார்வேறியாரெனக்கூறிவெஃகியே
கரவுசேர்நரிகவியிருந்திடுங்காலையெய்தினன்கண்ணுதற்பிரான்
புரவுசால்புகழ்க்கிதவாய்மைபான்பூதிபூசினன்சோதிமேனியான். (௧௧)

அருவுருக்கொளாவடவுருத்திரனக்கமாமணியணியுமார்பினன்
றிருவினீடருட்செல்வமேன்மையான்சிந்துதீபனுந்தெய்வமாதவ
னொருவுமுற்பவத்துள்ளநன்மையாலுவையிரண்டுமங்கவனைநோக்கியே
யிருகழற்பணிந்தேத்தியெந்தைநீயீதுகேளெனுவோதுமொன்றரோ. (௧௨)

மனுதியெய்திடாமறையுணர்ந்திடும்வரதநீயெலாவறமும்வல்லையா
லினுததீமைகூரொம்மைநோக்குவாயிழிபிறப்புடலிதுபொறுக்கிலேம்
பினுகியன்பனேபிரியுமாறிதுபேசல்வேண்டுநீபெறுகிவேண்டிடா
ரநாதர்நொந்துளார்சிறுவர்வெம்பிணியாளர்பாலருளறிஞர்செய்வரோ. (௧௩)

எந்தைநின்கணெலெம்மையாள்கெனுவிருபதம்பணிந்திடவியம்புவான்
சிந்துதீபனுநுங்கள்பூருவந்தெரிந்தனம்பெயர்தேவசன்மனு
மந்தமில்லெழில்வேதநாதனுமாதிநாளினன்களவைகொண்டநெற்
றந்திடாமையாலந்தணர்க்கவர்தங்களிற்கறிதாங்கரத்தலால். (௧௪)

ஏயதுங்கள்பாற்சம்புவோடரியிருவிர்கேண்மினீரிந்தமாசுட
லோயுமாறுமக்காமுபாயம்யாமொன்றிசைக்குவந்தென்றிசைக்கடற்
சாயுசேதுநுக்கோடியெய்திநீர்கடிதின்மூழ்குமின்கடையுடற்பவ
மாயுமாறெனுவருளிமீளவுமாதவன்பழங்காதையோதுவான். (௧௫)

சுமதியென்னுமோர்சுருதியாளன்முன்சுரைகுடித்தனன்களையில்வேட்கையா
லமைகியின்றியேபுல்லினமங்கைதோளணைதல்செய்தனனந்தவல்வினை
யிமைகொளும்பொழுதளவிலிற்றதன்றிந்தவார்தனுக்கோடிமூழ்கியென்
றுமைமணாளனன்பினனுரைப்பநேருரைசெயுங்கவிநரியிரண்டுமே. (௧௬)

நேர்மகத்துறைச்சிந்துதீபனேசெப்புமந்தணனிப்புவித்தலத்
தார்மகன்மதுவுண்டதெந்தவாறவனைவெங்கொலைச்சவரர்தங்குலத்
தோர்மடந்தைவந்தெங்ஙன்மேவினுளுரைவிரித்தெனப்படிவனோதுவா
னேர்மராட்டதேயத்துளான்பெயரொச்சதேவனோரிருபிறப்பினன். (௧௭)

மதிகொள்செஞ்சடைவள்ளன்மாயலன்மகிழருச்சனைமரபினுற்றுவா
னதிதியர்க்கவர்நிதியமாகுவானரியநான்மறைமுறைபிறழ்ந்திடாக்
கதியினீடுவானவன்வயிற்றிலோர்காளைதோன்றினன்காமநூலதி
னுதிகொள்சிந்தையான்குமதியாயினுநுவலுவார்கள்பேர்சுமதியென்பரால். (௧௮)

இற்கலப்பிலான்றந்தைதாயெனுமிருவர்தம்மையுமொருவியேகியே
புற்கலப்பெயர்நாட்டின்மேவினன்பூசுரக்குலத்தாசினீதியி
னிற்கலாற்றலான்விடருடன்றழீஇநிலையுநாளினிற்கொலைசெய்வேடுவப்
பிற்குலத்துளாளொருமடந்தைதான்பெண்ணுருக்கொள்கூற்றன்னதன்மையாள். ()

அரிவைமிக்கவளையன்மாரினுமாறலைத்திடாளன்புகூறியே
புரிவுசெய்தெலார்பொருளும்வெளவுவாள்பூவையன்னவள்பொதுவின்மேவினாள்
பரிவுகூர்மனச்சுமதிபோற்றினான்பாவைதானிலம்பாட்டிஒளொனாத்
திரிபின்மாண்பொருட்டிருடிநல்கியேதெரிவைதோள்புணர்செயலினீடினான். (௨௦)

முருகலர்க்குழற்புளினமாதொடுமோகமோவிலான்போகமேவுவா
னொருகலத்தினுண்டினோடுநறவுணவுமற்றவளோடருந்தினான்
றிருகலக்கனோடுறையுமிந்தநாட்டிருடல்வெஃகியேயருடிரிந்திடும்
பொருகலக்கமில்வேடர்தம்மொடும்போதுவான்கொள்வான்வேடம்வேறரோ. ௨௧

வேறுவேடமார்வேடர்போலவேவிறலிலாடர்தம்வேடமேவியே
யாறுசெய்கையானில்லிடம்புகுந்தவனதாவியுமம்பொனீட்டமும்
பேறுகொண்டுதான்பெருகுகாதலாற்பிறைகொணெற்றியாணிறைமதுப்புலா
னாறுமாம்பலாள்புளினமின்னனாணண்ணுமவ்விடநண்ணினானரோ. (௨௨)

வேறு.

திரியவருமவன்பின்னர்த்திணியிருளிற்கரவாம
லெரிகுஞ்சிவிளக்கேந்தியிழைத்தமறந்தருவதுபோற்
கரியதுகின்மருங்கசைத்துக்கடுங்குரலாற்றிசைகலக்கிப்
பெரியகொலைப்பிரமகத்திபிற்றொடர்ந்துபடர்ந்ததுவால். (௨௩)

பிற்றொடர்ந்துவெருவரல்செய்பிரமகத்திதனக்கஞ்சிச்
சொற்றொடர்மாநிலமுழுதுஞ்சுழன்மருத்திற்றடுமாறி
நற்றொடர்பின்வானரமேநரியேமற்றவனந்நாண்
முற்றொடர்பாலொருபகற்றன்மூதூரைவந்தடைந்தான். (௨௪)

வந்தவன்றன்றாதையடிவணங்கிமனமருளூற்றே
னெந்தையெனைப்புரவென்றானீன்றவனுமருள்பெருகிச்
சிந்தையினிலச்சமுறேல்சிறுவவெனமருங்கழைத்துப்
புந்திகொடண்ணளிபுரியப்புகுந்தனனப்பொழுதின்கண். (௨௫)

பெற்றவனைமுகம்பார்த்துப்பிரமகத்திநீயிவனைப்
பற்றியருள்புரியற்கபார்ப்பானையுயிர்கொன்றா
னற்றமிகுஞ்சுராகுடித்தானாடகக்கள்வனுமானான்
முற்றுமிவன்செய்தவெலாமுடிவிலதிபாதகமே. (௨௬)

தன்றனைமுன்சுமந்தளித்ததாய்தனக்குந்தந்தையெனு
முன்றனக்குமில்லவட்குமுதவலிலாப்பெரும்பாவி
யின்றிவனைக்கைப்பிடித்தாலிவனளவன்றீங்குனையுங்
கொன்றிருவர்மாதரொடுங்குலமுழுதுங்கொலைசெய்வேன். (௨௭)

ஒழிக்கிலுமக்கிடர்செய்யேனொருவனுக்காவொருகுடும்ப
மழிக்குமதுமரபன்றாலறப்பனுவலாய்ந்துளையாற்
கழிக்குமதேகடனெனலுங்கலைமறையோன்கடிதனைப்பார்த்
திழிக்குநெறியவனெனினும்யான்பயந்தமகவன்றே. (௨௮)

தருக்குமுயிர்தானிழந்ததனயரவர்க்கரைந்தழுதே
யுருக்கியுடலுடன்சாதற்கொருப்படுவருலகுள்ளோ
ரிருக்குமகவிறந்திடுதற்கிசைந்திடுமாறெவன்கொல்லோ
பெருக்குமகக்காதலெனைப்பிரிகிலதென்செயவென்றான். (௨௯)

